# திராவிடநாடு

...8—58

விலை 16 காசு




ஓராண்டு! — ஓடிவிட்டது; உத்தமர் உள்ளத்தைவிட்டு, ஒருநாளு நாமம், ஓடுமோ! ஒருநாளு மில்லை; ஒருநாளுமில்லை.

# சிங்கள "சிறீ" எதிர்ப்புப் போராட்டம்

சூழ்ச்சி முறையான ஆட்சியைத் தமிழ் பேசும் மக்கள்மீது திணிப்பதையே இலட்சியமாகக்கொண்ட சிங்கள ஆட்சியாளர், மோட்டார் வண்டிகள், லாரிகள், பஸ்வண்டிகள் மீது புது இயக்கமொன்றைப் புகுத்தினர்கள். அவர்கள் இந்த இயக்கத்தை இட்டு தமிழ் பேசுவோர் சிரத்தை எடுக்கமாட்டார்கள் என ஆரம்பத்தில் எண்ணினர்கள். தமிழ் பேசும் மக்கள் அனைவரும் இலங்கை முழுவதிலும் ஒரே குரலோடு எதிர்த்து ஆட்சியாளரை அடிபணியச்செய்த பின்னரே ஆட்சியாளர் தமது புத்தியின் கூர்மையை எண்ணித் தமக்குள் தாமே பிணங்கினர்கள். இந்த வண்டிகளில் உள்ள இலக்கங்களின் முன் ஆங்கில எழுத்துக்கள் இருப்பது வழக்கம். ஆனல் நமது ஆட்சியாளர் ஆங்கில எழுத்துக்களுக்குப் பதிலாக சிங்கள சிறீ (ஸ்ரீ) எழுத்தைப் போட்டு அதன் பின் இலக்கங்களைப் பொறிக்கும் சட்டத்தை இயற்றிச் செயலிலும் கொண்டு வந்தார்கள். முதலில் தமிழ்த் தலைவர்கள், ஆட்சியாளரிடம் இதன் வஞ்சனையை எடுத்துக் கூறினர்கள். தமக்கு நீதி வழங்கவேண்டும்; தமிழ் பரிகாசம் செய்யப்படுவதுமன்றித் தமிழன் தன்மானமிழந்த நிலையில் வாழும் அடிமைத் தனத்திற்கும் உங்கள் "சிறீ" வைத்துள்ளது. ஆதலால் அதனை மாற்றியமைக்க வேண்டுமெனக் கேட்டார்கள். "சிங்களமே இந்நாட்டின் அரசியல் மொழி; எக்காரணத்தைக் கொண்டும் எமது திட்டத்தை மாற்றமாட்டோம்" என்றனர் ஆட்சியாளர். பல வகைகளில் முயன்றும் ஆட்சியாளர் நீதிக்குச் செவிசாய்க்க மறுத்ததும் தமிழர் தம் மோட்டார் வண்டிகளில் தமிழ் 'சிறீ' எழுத்தைப் பொறித்தார்கள். பஸ் வண்டிகள், லாரிகள் முதலியன வற்றிலும் தமிழ் சிறீ எழுத்தைப் பொறித்தார்கள். பஸ் வண்டிகள் தேசிய மயமானதால் ஆட்சியாளர் நடவடிக்கை எடுப்போம் என மிரட்டினர்கள்.

இலங்கையில் தமிழர் வாழும் பிரதேசங்கட்குச் செல்லும் பஸ் வண்டிகளில் சிங்கள 'சிறீ' எழுத்திருந்தால் பொதுமக்கள் வண்டியை நிறுத்தி தமிழ் 'சிறீ' எழுத்தை எழுதுவார்கள். இதே இயக்கத்தினலேதான் மலை நாட்டுத் தமிழர் இருவர் போலிசாரால் சுடப்பட்டு மாண்டனர். அக்கிரமமாகச் சுடப்பட்டு மரணமடைந்த இரு திமாகிகளைப்பற்றிக் கேட்க நாதியற்ற இந்தியமந்திரத் தூதுவர்தான இன்றைய கோர சம்பவம் பற்றி நடவடிக்கை எடுக்கப் போகிருர்? ஸ்ரீ எதிர்ப்பு இயக்கம் வளர்ந்தது. சிங்கள 'சிறீ' எழுத்துப் பொறித்த பஸ் வண்டிகள் பின்னர் துப்பாக்கி தாங்கிய

**முருகு**

போலிசாருடன் வந்த போது மக்கள் அதில் பிரயாணஞ் செய்யாது புறக்கணித்தனர். தமிழ்ப் பிரதேசங்களில் சிங்கள சிறீ பொறிக்கப்படாத ஆங்கில எழுத்துக்கள் பொறித்த பஸ் வண்டிகளில் பிரயாணம் செய்வதையே புறக்கணித்தார்கள் "தினமொன்றுக்கு லட்ச ரூபாய்கள் நஷ்டமேற்படுகிறது" என ஆட்சியாளர் கதறினர்கள். தமிழ் சிறீ இயக்கம் உச்ச நிலை அடைந்தது.

தமிழ் அழிப்பு இயக்கம் தீவிரமாக நடைபெற்றது. பெரும் அளவில் நடைபெற்றது. சிங்களப் பிரதேசங்களில் தமிழர் கடைகளிலுள்ள தமிழ் வார்த்தைகள் தாரினல் அழித்து மறைக்கப்பட்டன. இந்த இயக்கத்தை அரசாங்கம் எவ்வகையிலும் தடை செய்யவில்லை. ஆனல் பஸ் வண்டிகளிலுள்ள சிங்களசிறீ எழுத்துக்களை மாற்றி தமிழில் எழுதுவோர் மீது ஆட்சியாளர் நடவடிக்கை எடுத்து சிறைக்கும் அனுப்பினர்கள். சிங்களப் பிரதேசங்களிலுள்ள தமிழ் அழிப்பு இயக்கம் முடிந்ததும் சிங்களக் காடையர்கள் எல்லைப் பிரதேசங்களிலுள்ள தமிழ்க் கிராமங்களிலும் அரசாங்க லாரிகளில் வந்து தமிழ் அழிப்பு இயக்கத்தை நடாத்தி இரு கிராமங்களில் வெற்றி கண்டார்கள். மக்கள் பொலிசாருக்கு முறையிட்டார்கள். ஆட்சியாளருக்கு அறிக்கை கொடுத்தார்கள். எவ்வித பதிலோ, உதவியோ இடைக்கவில்லை.

பாவற்குளம் என்பது தமிழ் நாட்டின் எல்லையிலுள்ள விவசாயத்திற்குச் சிறந்த இடம். இதனை ஆட்சியாளர் குடியேற்றத் திட்டமாக்கிச் சுமார் 3000 சிங்களவர்களைக் குடியேற்றி இருந்தார்கள். அதனை விஸ்தரிக்கும் வேலையில் சுமார் 500-சிங்களத் தொழிலாளர்கள் வேலைசெய்தனர். இந்தக் கூலிப்படையைக் கொண்டுதான் தமிழ்க் கிராமங்களில் தமிழ் எழுத்து அழிப்புத் தொண்டினைச் சிங்கள அதிகாரிகள் நிறைவேற்றினர்கள். இப்பாவற்குளம் என்ற இடத்திற்கு சுமார் 18-மைல் தூரத்தில் செட்டிகுளம் என்ற தமிழ்க் கிராமம் உண்டு. பாவற்குளக் கூலிப்படை செட்டிகுளத்தை நோக்கி தமிழ் அழிக்கும் தொண்டிற்கு வருவார்கள் என்பதைச் செட்டிகுள மக்கள் அறிந்து சில ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். எதிர்பார்த்தபடி நாலு அரசாங்க லாரிகளில் 80-பேர் செட்டிகுளம் நோக்கி வந்தார்கள். இம்முறை ஜீப் வண்டியொன்றும் கொண்டுவந்திருந்தார்கள். அத்துடன் ஆசிட், எறிகுண்டு, பெட்ரோல், கத்திகள், துப்பாக்கிகள் முதலியன காணப்பட்டன. ஜீப் வண்டி முதலில் வந்து செட்டிகுளத்திற்கு அரைமைல் தொலைவில் நின்றது. ஐந்து நிமிடத்தின் பின் லாரிகள் வந்து ஜீப் வண்டிக்குப் பின்னே 600 அடி தூரத்தில் நிறுத்தப்பட்டன. சிங்களக் காடையர்கள் கையில் பிரஷ்,

(4-ம் பக்கம் பார்க்க)



# ★ "விழா" ★

[மலர் 17] ஆண்டு சந்தா ரூ. 8 [31–8–58] தனிப் பிரதி 16-காசு [இதழ் 7

ஆண்டு முழுவதும், ஏதாவது ஒரு 'வாரம்' கொண்டாடுவது என்பது இப்போதெல்லாம் மிகச் சாதாரணமாகி வருகின்றது. எந்த "வாரம்" கொண்டாடுகின்றர்களோ அந்த வாரத்திற்கு உரிய இடத்தில்அலங்காரங்கள் மிகுவதும், அதிகாரிகளின் நடமாட்டம் பெருகுவதும், வேடிக்கைகள் நிலவுவதுமாக ஒரு கிழமை அங்கே 'கோலாகலம்' கொலுவிருக்கிறது. அந்தக்கிழமை முடிந்ததும் பழையபடியே அங்கே வெறுமை வந்துவிடுகின்றது.

இரயில்வேயில் 'வாரம்' கொண்டாடுகின்றர்கள்; ஒவ்வொரு துறையிலும் 'மரியாதை வாரங்கள்' கொண்டாடுகின்றர்கள்; மரம் நடுவதற்கு வாரம் இருக்கிறது; ஐந்தாண்டு திட்டத்தைப் பிரச்சாரம் செய்யவும் வாரம்! இப்படி எத்தனை எத்தனையோ வாரங்கள், வளர்ந்துகொண்டே யிருக்கின்றன.

எந்த வாரமாக இருந்தாலும், அதைக் கொண்டாடுவதன் நோக்கம், ஆண்டு முழுவதும் அந்தச் செய்தியின் நினைவு மனதில் நிலைக்கவேண்டும், மக்கள் அதனல் பயன்படவேண்டும் என்பதேயாகும். அதனல் நடைமுறையில் 'விழா' ஏதாவது பயனளிக்கிறதா என்று பார்த்தால், மறுபடியும் அந்த விழா வருகின்றபோதுதான் அதைப்பற்றிய நினைப்பே வருகின்றது பலருக்கு. இத்தனைக்கும் நடத்தப்படுகின்ற விழாக்களில் பல மக்களுக்கு உண்மையிலேயே பயன்படக்கூடியவையாகும். ஆனலும் மக்களுடைய மனம் அந்த விழாக்களில் முழுதுமாக ஈடுபடவில்லை. மக்கள் மனம் மட்டும் என்ன, அதைக் கொண்டாடுகின்ற அதிகாரிகளின் மனமே அதில் ஈடுபடுமோ என்னவோ தெரியவில்லை.

இதற்கு என்ன காரணம்? இந்த விழாக்களையும், அவை கொண்டாடப்படும் முறையையும்பார்த்தால், இதனல் மக்கள் பயன்படவேண்டும் என்பதோ, இதிலே கருத்துச் செலுத்தவேண்டும் என்பதோ நோக்கமாகத் தெரியவில்லை. மாருக இதனல் பிரச்சாரம் நடந்தால் போதும் என்று கருதுவதுதான் நோக்கம்போலும் என்று நினைக்கக்கூடிய வகையில் அந்த விழாக்கள் அமைகின்றன.

அந்தப் பிரச்சாரமும், அந்தத் துறையைப் பற்றிய செய்திப் பிரச்சாரமாக இராமல், 'அரசாங்கத்தின் சாதனைகளை'ப்பற்றிய பிரச்சாரமாக முடிகின்றது. அதனல்தான் சர்க்கார், இந்தத் துறையில் எவ்வளவு உற்சாகமாக ஈடுபடுகின்ருர்களோ, அவ்வளவு உற்சாகமாக மக்கள் இதிலே நாட்டம் கொள்ளுவதில்லை.

எனவே இந்த முயற்சிகளினல் உண்மையிலேயே பயன் விளையவேண்டுமானல், எந்த விழாவாக இருந்தாலும், அதில் சர்க்கார் பெறும் பங்கை விடப் பொதுமக்கள் பெறும்பங்குபெரியதாக இருக்க வேண்டும். அதனல் தங்களுக்கு உண்மையிலேயே நன்மையிருப்பதாக மக்கள் கருதவேண்டும். இப்போது கொண்டாடப்படுகின்ற விழாக்களிலும் இரண்டொன்றில் மக்கள் கொஞ்சம் நாட்டம் கொள்ளுவதற்குக் காரணம், அவற்றினல் தாங்கள் நன்மை பெறுகின்ருேம் என நம்புவதே ஆகும்.

எடுத்துக்காட்டாகக் கைத்தறி வார விழாவைக் காண்போம். மற்ற வார விழாக்களைவிட இதில் மக்களுடைய தொடர்பு மிகுதியாக இருக்கிறது. அதனல் மற்ற விழாக்களில் இருப்பதைவிட இதிலே மக்களுடைய அக்கரை மிகுந்திருக்கிறது.

இன்னென்று: இந்த வாரங்களைக் கொண்டாடும்போது, இவற்றிற்கும் விழா என்று பெயர் அமைந்திருக்கின்ற காரணத்தினலோ என்னவோ, இவற்றைக் கொண்டாடும்போது, மற்ற மத விழாக்களில் இருப்பது போன்ற ஆடம்பரங்களைக் கூட்டி விடுகின்றனர். பல இடங்களில் 'வாணங்கள்! அதிர் வேட்டுக்கள்!

விழா என்ற பெயர் வீண் வேடிக்கைகளைத் தருவதற்கு என்று பொதுமக்கள் பொருள்கொண்டு விடாது பார்த்துக்கொள்ள வேண்டும். விழா என்ருல் அதனல் என்ன விளைவு என்று பார்த்து, அந்த விளைவு நல்லதாகவும், நாம் விரும்புகின்ற வகையிலும் அமைய வேண்டுமானல், அதற்கு ஆன வழி துறைகள் என்னென்ன என்று கண்டறிந்து அந்த வகையிலும், முறையிலும் விழா கொண்டாடுவதுதான் உண்மையிலேயே நல்ல விளைவு காண்பதற்கான வழியேயன்றி வெறும் வேடிக்கைக் களியாட்டமன்று.

இனி வரும் 'வார'ங்களாவது வேடிக்கைகளோடு முடியாமல், சம்பந்தப்பட்ட துறைபற்றிய விஷய விளக்கங்களைப் பொதுமக்களுக்கு உணர்த்தும் வழியிலும், வகையிலும் வரவேற்கப்படும் என நம்புகின்ருேம்.

★

2-ம் பக்கத் தொடர்ச்சி

தார் முதலியன இருந்தன. லாரியை விட்டுக்கீழே இறங்கினர்கள். அவ்வளவுதான். லாரிகள் தீப்பற்றி எரிந்தன. சிங்களக் காடையர்கள் திகைத்தார்கள். காடுகளினுள் இருந்து (பக்கத்தே சோலைக்காடு) துப்பாக்கி வெடிகள் வந்ததைக் கண்டதும் திரும்பி ஓடினர்கள். இதற்கிடையே ஜீப் வண்டியைச் செட்டிகுள வாலிபர்களில் ஒரு பகுதியினர் சூழ்ந்து நின்றனர். ஜீப் வண்டியின் சாரதியும் தாக்கப்பட்டார். ஓட்டம் பிடித்த சிங்களக் காடையர்களை விரட்டிக்கொண்டு பாவற்குளம் வரை சென்று அங்கும் அவர்களை விடாது விரட்டி குடியேற்றக் காலனியையே அழித்தும் செய்தார்கள், செட்டிகுளத் தமிழர். பாவற்குளமும், கல்லோயாவின் நிலைமையை அடைந்தது. தமிழ்எழுத்து அழிப்பும் ஓரளவில் ஓய்ந்தது. இந் நிகழ்ச்சியின் பின் தமிழ்க் கிராமங்களுக்கு அண்மையிலுள்ள குடியேற்றச் சிங்களவாசிகள் அக்கிராமங்களைக் காலி செய்துவிட்டு ஓடினர்கள். இன்று இராணுவ உதவியோடு மீண்டும் வந்து குடியேறுகிறார்கள். சிறி பிரச்சனை கட்டுக்கடங்காது போகும் நிலைகண்டு போக்குவரத்து மந்திரி தமிழ்த் தலைவர்களை அழைத்து ஸ்ரீ பிரச்சனையில் தமிழர் கட்டுப்பாட்டை மீறியதாகவும், அரசாங்கத்தினைக் கவிழ்க்கச் சதி செய்வதாகவும், உடனடியாகவே பத்திரிகைகள் மூலம் அரசாங்கத்திடம் மன்னிப்புக்கோரவேண்டுமெனவும் கூறினர். அதைத் தமிழ்த் தலைவர்கள் ஏற்றுக்கொள்ள மறுத்ததுமன்றி அரசாங்கத்தின் விதண்டாவாதப் போக்கையும் கண்டித்தார்கள். "செல்வநாயகம் பண்டார நாயக்கா ஒப்பந்தத்தில் பிரதேச சபை ஆட்சியும் ஒரு சரத்தாகச் சேர்க்கப்பட்டிருந்தது. மோட்டார் வண்டிகளின் எழுத்துக்கள் எது என்பதை அப்பிரதேச சபைகளே முடிவு செய்யும் அதிகாரமும் இருந்தது. இவ்வாறு ஒப்பந்தத்தை எழுதி வைத்துவிட்டு உடனடியாகவே சிங்கள சிறி பொறித்த பஸ் வண்டிகளைத் தமிழ்ப் பிரதேசங்களுக்கு நூற்றுக்கணக்கில் அனுப்புவதும், மோட்டார் வண்டிகள், லாரிகள், அனைத்திலும் சிங்களசிறி எழுத்துப்பொறிக்கும் சட்டத்தைத் தீவிரமாக்குவதும், தமிழ் பொறித்த மோட்டார் வண்டிகளின் சாரதிகளைத் தாக்குவதும் அரசாங்கத்தின் அயோக்கியத்தனத்தையே பிரதிபலிக்கிறது" என்ற அறிக்கையையும் வெளியிட்டார்கள்.

தமிழ் எழுத்துக்கள் அழிப்பு இயக்கம் ஓய்ந்தபின் தமிழ்ப்பகுதியிலிருந்து தென்னிலங்கை செல்லும் எல்லாவித மோட்டார் வண்டிகளிலும் சிங்களக் கூட்டத்தார் சிங்கள சிறி எழுத்தைத் தாரினால் எழுதத் தொடங்கினர்கள். இச் சந்தர்ப்பத்தில் எமது இந்திய மந்திரத் தூதுவர் மோட்டார் வண்டிக்கும் அக்கெதி நிகழ்ந்தது. எது நடந்தாலுமென்ன...? இந்த இயக்கம் சில இடங்களில் கைகலப்பிலும், கலவரத்திலும், கொலைகளிலும் முடிந்தது. தீக்கிரையான மோட்டார் வண்டிகளும் பல. எத்தனை இன்னல்கள் ஏற்படினும், எத்தனை ஆயிரம் மக்கள் அழிந்தாலும் சிங்கள சிறியை ஏற்கமாட்டோமென உறுதியோடு, தமிழ் பேசுவோர் கொண்ட உறுதியைக் கலைக்க ஆட்சியாளரும் தம்மாலான அனைத்தையும் கையாண்டனர். எதிர்ப்பு உச்சிநிலை அடைவதைக் கண்ட போக்குவரத்து மந்திரியாரின் அனுசரணையோடு போக்கு வரவுச் சபைத் தலைவர் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டார்:—"சிங்கள சிறியைத் தமிழர்கள்மீது திணிக்கவேண்டுமென்பது அரசாங்கத்தின் நோக்கமல்ல. பொதுமக்கள் சௌகரியமாகப் பிரயாணஞ் செய்யவேண்டுமென நாம் எண்ணியதால் சிறி பொறித்த புதிய பஸ் வண்டிகளை அனுப்பினேம். மக்கள் விரும்பாவிடில் நாம் வற்புறுத்தாது புது வண்டிகளை அனுப்பாது விடுகிறேம்." என்பது. பிரதமர் பண்டாரநாயக்காவின் அறிக்கை: "தமிழ்த் தலைவர்கள் இப்பிரச்சனையை ஆரம்பத்திலே என்னுடன் யோசித்திருந்தால் எந்தவித நெருக்கடியுமின்றி இதனைத் தீர்த்திருப்பேன்." என்பது. சிங்கள ஆட்சியாளர்கள் அறிக்கைகளை விட்டார்களே ஒழிய, பொது மக்கள் மத்தியில் கலவரங்களும், பகைமைகளும் வளர்ந்து கொண்டே வந்தன. இன்றும் வளருகிறது. சிறி எதிர்ப்பில் பல நூற்றுக்கணக்கான தமிழர் சிறை சென்றுர்கள். இன்னும் பலர்மீது வழக்குத் தொடரிருர்கள். ஆனல்...அரசாங்கக் காரியாலயங்களில் புகுந்து தமிழ் எழுத்தின் மீது தார்பூசியவர்கள் பேரில்கூட ஆட்சியாளர் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

★



# உணர்ந்ததும், உணரவேண்டியதும்

M. S. வெங்கடாசலம், M. A.

"இந்தோ ஆரிய மொழிகள் உட்பட எல்லா மொழிகளுமே திருத்தம் பெறுமல், பேச்சு மொழியாக மட்டுமே இருந்தன, துளசிதாசர், ஞானேஸ்வரர், சைதன்யர் ஆகியோரின் முயற்சியால் அவை வளர்ச்சியடைய வேண்டிய நிலையிலிருந்த அந்தக் காலத்திலேயே, தமிழ், பெருமைப்படத்தக்க அளவில் இலக்கிய வளத்தையும் இலக்கண வரம்பையும் பெற்றுத் திகழ்ந்தது."

—இந்தத் துணைக்கண்டத்தின் 'ஜனாதிபதி' இராசேந்திரபிரசாத், ஆந்திரத்தின் தலைநகராம் ஐதராபாத் நகரில் பேசிய பேச்சின் ஒரு பகுதி தான் இது.

தமிழின் தொன்மை பற்றியும்' வளம்பற்றியும் நாம் நன்கறிவோம்.

திராவிட இயக்கத்தவர், தமிழ் மக்களுக்கு அந்தத் தன்மைகளை யெல்லாம் எடுத்துரைத்து, உள்ளத்தில் பதியவைத்திருக்கிருர்கள்.

ஆனலும், இன்றுவரை உலகம் தமிழ் மொழியினைப் பற்றியோ, தமிழ்ப் பண்பாட்டைப் பற்றியோ, தமிழினத்தின் சீர்சிறப்புகளைப் பற்றியோ, சரியாக உணர்ந்திடவில்லை என்பது மறுக்கமுடியாத உண்மை.

உலகம் உணர்ந்திடவில்லை என்பது மட்டுமல்ல! "பாரதம் ஒன்று தான்—பற்பல வேற்றுமை இங்கே இருந்திட்டாலும், அவற்றிற்கிடையே ஒரு அடிப்படை ஒற்றுமை இருக்கிறது" என்று பற்பலரும், நாள்தோறும், பேசி வருகிற கருத்து எவ்வளவு தவருனது என்பதனை எடுத்துக்காட்டும் வகையில், வட இந்தியாவில் உள்ளவர்களே, தமிழைப் பற்றியோ தமிழினத்தைப் பற்றியோ, தெரிந்திட இயலாத நிலை இருந்து வருகிறது.

அண்மையில் "சுயராஜ்யா" என்ற இதழில் K. A. அப்பாஸ் தீட்டியிருக்கிற கட்டுரை, இந்த உண்மையினை தெள்ளத் தெளிய விளக்கிடுகிறது.

"வட இந்தியாவில் உள்ள ஒரு பல்கலைக் கழகத்தில் எம். ஏ. பட்டத்திற்காகப் பயிலுகின்ற ஒரு மாணவனை அணுகி, அப்பாஸ் கேட்டாராம், "மதராஸ் மாநிலத்தில் பேசப்படுகிற மொழி என்ன தெரியுமா?" என்று! அந்த மாணவன் உடனே பதில் சொன்னனும், "இது தெரியாதா, மதராஸி மொழிதான் அங்கே பேசப்படுகிறது," என்று!

'தமிழ் நாட்டில் மதராஸிமொழி பேசப்படுகிறது' என்று சொல்லுவது, படிப்பறிவற்ற பாமரனல்ல! ஏற்கனவே பி. ஏ. பட்டம் பெற்றுவிட்டு, எம். ஏ. பட்டத்திற்காகப் பயிலுகின்ற மாணவன்!

அந்த அளவுக்கு, தமிழைப் பற்றி, வடநாட்டிலே உள்ளவர்களுக்கே தெரியாத நிலை இருக்கிறது!

தமிழ்நாட்டுக்கு "மதராஸ் மாநிலம்" என்று பெயர் இருப்பதால் இத்தகைய குழப்பம் ஏற்படுகிறது—"தமிழ்நாடு" என்ற பெயர் மாற்றிட இன்னமும் ஏன் நமது அரசாங்கம் முன்வரவில்லை— என்று கேட்டு, நமது அரசினர் மீது குற்றம் சாட்டுவதற்காக அல்ல இதைக் குறிப்பிடுவது!

அப்படிக்குற்றம் சாட்டுவதாலே காமராசருக்கும், அவர்தம் அமைச்சரவையிலே இடம் பெற்றிருக்கிற கனம்களுக்கும் மொழிப்பற்றும் இனப்பற்றும் ஊற்றெடுத்துப் பெருகி, இந்தத் தேவையான தோர் மாற்றத்தைச் செய்திட முன்வருவார்கள், என்று கருதி ஏமாறும் நிலையிலில்லை நாம்!

உறங்குபவர்களை எழுப்பிவிடலாம்—உறங்குவதைபபோல் பாசாங்கு செய்பவர்களை எழுப்ப முடியாது! இந்த உண்மையை உணராதவர்களல்ல நாம்!

நமக்கு ஏற்படுகின்ற எண்ணமெல்லாம், இந்த அளவு தமிழைப் பற்றி அறிந்திராத வெளியுலகம், இப்போது புரிந்துகொள்வதற்கு நல்லதோர் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது, இராசேந்திரரின் பேச்சு, என்பதுதான்! அந்த வகையிலே மகிழ்ச்சி!

தமிழின் சிறப்புக்களைப்பற்றித் தமிழர்கள் பேசுவதற்கும், மற்றவர்கள் எடுத்துரைப்பதற்கும் வேறுபாடு இருக்கிறது!!

மகன் நல்லவன் என்று தாய் புகழ்வதற்கும், ஊரிலுள்ள மற்றவர்கள் புகழ்வதற்கும் வேறுபாடு உண்டல்லவா! தாய், பாசத்தின் காரணமாக, தன் பிள்ளை நல்லவன் என்று சொல்லிவிடக்கூடும்! ஆனல் ஊரார் அப்படியல்லவே! அவன் நடத்தையையும் பெற்றேரிடமும் மற்றேரிடமும் பழகுகிற பாணியையும் பார்த்துத்தான் அவன் நல்லவனு அல்லவா என்று தீர்ப்புச் சொல்லுவார்கள். அதைப்போன்றது தான், இராசேந்திரர் போன்றோர் தமிழின் தொன்மைபற்றியும், பற்பல சிறப்புக்களைப்பற்றியும் புகழ்வது!

அதுமட்டுமல்ல! அவர் இருக்கும் இடம், அவரது சொல் ஒவ்வொன்றுக்கும், ஆழ்ந்த பொருளைத் தருவது—உலகின் கவனத்தையே ஈர்க்கவல்லது.

"இந்தியாவின் ஜனதிபதியே சொல்லிவிட்டார்; தமிழ் மிகவும் சிறப்பு வாய்ந்த மொழி என்று. அதிலிருக்கும் சிறப்புத்தான் என்ன" என்று பற்பல மொழியாராய்ச்சி வல்லுனர்கள் இந்தப் பணியிலே இறங்கிடக்கூடும்.

"உலகத்திலே உள்ள மொழியியல் நிபுணர்கள் பலரும், திராவிட மொழிகள், இலக்கியங்கள், பண்பாடு, இவைபற்றிய ஆராய்ச்சிகள் வேண்டுமென்றே தவிர்க்கப்பட்டிருக்கின்றன என்பதை உணருகிருர்கள்"

—என்று செக்நாட்டு மொழியியல் நிபுணரான கமில் சுவெலபில் என்பார் கூறியிருக்கிருர்.

ஐரோப்பா கண்டத்தைச் சேர்ந்த சிறியதோர் நாட்டிலே இருக்கின்ற ஒருவர், வருந்தி, உளம் வெதும்பி, எடுத்துக்கூற வேண்டிய நிலையில், ஒதுக்கப்பட்டிருக்கிற ஆராய்ச்சி, இனித்

துவக்கப்படக் கூடும், மேல்நாட்டு நிபுணர்களால்.

தமிழைப்பற்றி, உலகம் புரிந்து கொள்ளும் விதத்தில் உண்மையை எடுத்துக் கூறியதற்கு, தமிழ் மக்களின் சார்பில், தமிழ்ப் பற்றுக் கொண்டோரது சார்பில், இராசேந்திரருக்கு நன்றி கூறிடக் கடமைப்பட்டிருக்கிறோம் நாம்!

நன்றி கூறுகிற அதே நேரத்தில் நம் உள்ளத்தில் மற்றொரு கேள்வியும் எழுகிறது!

இவ்வளவு சீரும் சிறப்பும், தொன்மையும் வளமும், பெற்றிருக்கிற ஒரு மொழியினைத் தங்கள் மொழியாகக் கொண்ட மக்கள், இந்த எண்ணிறந்த பண்புகளில் எதையுமே பெற்றிராத இந்தி மொழியை, ஆட்சி மொழியாக, ஏற்றுக்கொள்வார்கள் என்று இராசேந்திரராலும், மற்றும் பல வடநாட்டுத் தலைவர்களாலும், எப்படி நம்பமுடிகிறது, எதிர்பார்க்க முடிகிறது, என்பதுதான்!

காலை இளம் பகலவனைக் காட்டுகின்ற பளிங்குருவம் — பட்டுப் போல் மேனி — துறுதுறுக்கும் கண்கள்—கொவ்வை இதழ்கள்—கொள்ளையின்பம் இங்கென்று கூறும்படி கூறுகின்ற மழலைமொழி — இத்தனையும் பெற்றிருக்கிற குழந்தையின் பெற்றோர்கள், இந்தப் பண்புகளில் எதையுமே பெற்றிராத ஒரு குழந்தையை வாரிசாக எடுத்துக்கொள்வார்கள், என்று எந்தக் கருத்துக் குருடனும் எதிர்பார்க்கமாட்டான்!

ஆனாலும் இந்தியை நாம் ஏற்றுக்கொள்வோம் என்று எதிர்பார்க்கின்றனர், வடநாட்டுத் தலைவர்கள்! எதிர்பார்ப்பது மட்டுமல்ல அதனை நம்மீது திணிப்பதற்காக எந்தெந்த வகைகளிலெல்லாம் முயலவேண்டுமோ, இயலுமோ, அந்தெந்த வகையிலெல்லாம்முயலுகிறார்கள்.

அழகான குழந்தை — அது சிரித்தால் சிந்தை நோய் தீரும் மழலைமொழி ஒன்றினைக் கேட்டால் மலைபோல வருகின்ற இடுக்கண்கள் யெல்லாம் தூளாக்குகிற வலிமை மனதுக்கு ஏற்படும்—அதன் கண்ணொளி கருத்தைக் குளிரவைத்திடும் — என்ற நிலை இருக்கும்போது, அந்தக் குழந்தையை, எந்த நிலையிலும் எப்பாடுபட்டாவது காப்பாற்றித் தீரவேண்டும் என்ற எண்ணம் பெற்றோருக்கு எழுவதிலே தவறில்லை—இயற்கை! காக்கைக்கே தன்குஞ்சு பொன்குஞ்சாக இருக்கும்போது, இந்தக் குழந்தையைக் காப்பாற்றுமலா விடுவார்கள் அதன் பெற்றோர்கள்?

அந்தப் பெற்றோரின் நிலையிலே இருப்பவர்கள் தமிழர்கள்! தாய் மொழிக்கு ஆபத்து எந்த நேரத்திலும் வரக்கூடும் என்ற நிலை!

"ஆரிய மென்ப தொரு தாம்பு—அது
தமிழைக் கடிக்க வந்தப் பாம்பு"

என்கிறார் புரட்சிக்கவிஞர்! இன்று அந்தத் தாம்பு உருவத்தில், பாம்பாக வருகிறது!

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே பண்பட்டுத் திகழ்ந்த தமிழ்மொழி— இராசேந்திரர் போன்ற வடநாட்டுத் தலைவர்களாலேயே இப்போதாவது பாராட்டப்படுகின்ற மொழி — அழியாமல், மேலும் வளர்ச்சியுற வேண்டுமானால், இந்தி உருவில், அதற்கு வருகிற ஆபத்திலிருந்து அதைக் காப்பாற்றியாக வேண்டும். இது தன்மானம் கொண்டோர் அனைவரது கடமையுமாகும்.

இராசேந்திரர், தமிழின் சிறப்பியல்புகளை உணர்ந்திருக்கிறார். அவர் உணரவேண்டியதெல்லாம் அத்தகைய சிறப்பியல்புகளைக் கொண்ட மொழியினைக் காத்திட அதனைத் தங்கள் மொழியாகக் கொண்டவர்கள் எப்பொழுதும் பின்வாங்கமாட்டார்கள் என்பதைத்தான்.

தமிழ் மொழியின் தொன்மை, சிறப்பு ஆகியவைகளைப்பற்றி டாக்டர் இராசேந்திரபிரசாத் இப்போது கூறிவிட்டதாலேயே, அதற்கொரு தனிச்சிறப்பு ஏற்பட்டுவிட்டதாக எண்ணி அவரை நாம் பாராட்டவில்லை. தமிழை உணரும் வாய்ப்பு அவருக்கு ஏற்பட்டதற்காகவே அவரைப் பாராட்டி மகிழ்கிறோம். அதே நேரத்தில் அவர் தமிழுக்கு அழிவு தேடும் பாதைகளையும் சுட்டிக் காட்டி, அவருக்கும் அவர்தம் சகாக்களுக்கும் இருக்கும் குறுகிய மனப்போக்கைச் சிறிது விரிவாக்கி, இந்நாட்டுக்குத் தனியாக ஒரு பொதுமொழி தேவையா? அப்படித் தேவைப்படுமானால், அந்த இடத்தில் எந்த மொழி இருக்கலாம் என்பதனை விரிவுபடுத்தப்பட்ட மனப்போக்கைக் கொண்டு ஆராய்ந்து பார்க்க வேண்டுமென்பதற்காகவே இதனை எழுதுகிறோம்.

வறிதே இந்திதான் 'இந்நாட்டு மொழி என்று எப்போதோ யாரோ, எதற்காகவோ கூறியதை வைத்துக்கொண்டு, அரசியல் அதிகாரம் தங்கள் கையில் இருப்பதாலேயே எதனையும் சாதித்து விடலாம் என்ற ஜனநாயகப் பண்பற்ற முறையைக் கையாள வேண்டாம் என்று கூற விரும்புகிறோம்.

இந்தி, இந்துஸ்தான் பற்றி அதிகம் பேசி வந்த காந்தியடிகள் கூட இப்போதிருந்தால்; இந்தியை பொதுமொழியாக்கும் அரசியல் போக்கை அறவே வெறுப்பார் என்பது திண்ணம்.

அன்று, தண்டவாளம் பெயர்க்கப்பட்டது. தந்திக்கம்பிகள் அறுக்கப்பட்டன. அப்போது காந்தியாரும் இருந்தார். அச் செயல்களைக் கண்டு கடிந்தாரோ என்னவோ, ஆனால் அவை போன்ற ஆகாச்செயல்கள் அப்போது தேவைப்பட்டன என்று கருதுபவர்கள் இருந்தார்கள். ஆகையால் அப்படிப்பட்ட அக்கிரமச் செயல்கள் இன்றும் தேவைதான் என்று, அன்று கூறியவர்கள்கூடத் துணிந்து கூறமாட்டார்கள்.

இதுபோன்ற நிலைதான் இந்தி இந்நாட்டின் பொதுமொழி என்பதிலும்.

அன்று சுயராச்சியம் பெறுவதற்காகக் கையாளப்பட்ட பல வேறு முறைகளில் இந்தி மொழியும் ஒன்று.

ஆனால், இன்றுள்ள நிலை வேறு; இப்போதுள்ள உலகச் சூழ்நிலைக்கேற்ப இந்நாட்டுக்குத் தேவைப்படும் பொதுமொழி எது என்பதை அறிவும் ஆராய்ச்சியும் நிரம்பிய பலரும் எடுத்துக் கூறி வருகிறார்கள்.

இதனை டாக்டர் இராசேந்திரரும் பிற இந்திமொழிவிரும்பிகளும் நன்குணரவேண்டுமெனப் பெரிதும் விரும்புகிறோம்.

இந்த உபகண்டத்தின் தலைவரே தமிழைப்பற்றி பெருமையாகப் பேசிவிட்டார்; ஆகவே தமிழ்மொழியையே இந்த உபகண்டத்தின் பொதுமொழியாக ஆக்குங்கள் என்று நாமகூறிக் தூகலிக்கவில்லை, அந்த அளவு குறுகிய—சுயநலமனப்பான்மை கொண்டவர்களுமல்ல, நம் மொழிக்கு உரிய இடத்தைக் கேட்கிறோம்! தவறு, இது!!

★

# மாசற்ற மருதாயி

சென்ற இதழ் தொடர்ச்சி...

ஒரு டாக்டரிடம் இருந்து வாங்கிய ஏழு ரூபாயை மற்றொரு டாக்டரிடம் தந்து குழந்தை மருக்கொழுந்துக்கு ஊசிபோட்டுக் கொண்டு வீட்டிற்குப் போய்விட்டாள். குழந்தையைப் படுக்கையில் போட்டுவிட்டு, இருக்கிற பொருள்களைக்கொண்டு ஏதோ வயிற்றை நிரப்ப உணவு என்று ஒன்று தயார்செய்து,தானும் சாப்பிட்டு மச்சான் வரவுக்காக எதிர்பார்த்து இருந்தாள்.

இரவு மருக்கொழுந்துக்கு காய்ச்சல்குறைந்திருந்தது.குழந்தைகண்களைத் திறந்துபார்த்து "அம்மா... காபி..." என்றது. ஏதோ இருந்த தூளைக் கொட்டிக் கொஞ்சம் காப்பித் தண்ணீரைக் கொடுத்தாள். சூடான காப்பித் தண்ணீரைக் குடித்தவுடன் குழந்தை தூங்கி விட்டது. செல்லப்பனும்வந்தான்; நேற்று நடந்ததுபோலவே இன்றும் நடந்தது. ஆனால் ஏதோ நாலணா கொடுத்துவிட்டுப் போய் விட்டான். குழந்தையைப் பற்றியோ அல்லது அவளைப் பற்றியோ ஒன்றும் கேட்கவில்லை. பாவம் எப்படி முடியும் அவனால்? அவனைப் பற்றியே அவன் நினைக்கும் நிலையில் இல்லையே! அவன் தான் உணர்ச்சியற்ற நிலையில் இருக்கின்றானே!

மறுநாள் குழந்தைக்கு ஜுரம் நின்றுவிட்டது. மருதாயிக்கு டாக்டர் கொடுத்த ஏழு ரூபாய் நினைவு வந்தது. இரத்த தானமும் நினைவு வந்தது. நேற்றுப் போல இன்று ஓடவில்லை. மெதுவாக, நின்று நிதானித்துத்தான் சென்றாள். ஆஸ்பத்திரிக்குச் சென்று இரத்ததானம் செய்யுமிடம் கேட்டாள். வழியைக் காண்பித்தார்கள். வழி காண்பித்த ஒரு சில கனவான்கள் அவள் போன வழியையே நோக்கிக்கொண்டிருந்தனர். ஒரு சிலர் "இவள் ஏன் இரத்தம் கொடுத்து ரூபாய் சம்பாதிக்கவேண்டும்—பைத்தியக் காரி,வாழத்தெரியாதவள்" என்று நினைத்துக்கொண்டனர்.

அவள் இரத்ததானம் செய்யும் இடத்திற்கு அருகே சென்றாள். வெளியே ஒரு பெரியவர், சுமார் ஐம்பதுக்கு மேலே நான்கு அல்லது ஐந்து வருடம்தான் ஆகி இருக்கும், அங்கிருந்து வந்து கொண்டிருந்தார், அவர் கழுத்தில் உருத்திராக்ஷம், நெற்றியில் மூன்று பட்டைத் திருநீறு. மும்மலங்களிலும் மூழ்கி எழும் ஈசன் பரம்பரை. ஆகையினால் இந்தக் கோலம். மண், பெண், பொன் இந்த மூன்றுக்கும் அடிமை

ச. இராமலிங்கம்

என்று அந்த முப்பட்டையைச் சாத்தியிருந்தார். அவர் எதிரே வருவதைப் பார்த்த மருதாயி,

"தாத்தா...... இரத்ததானம் செய்யுமிடம் இதுதானே" என்று கேட்டதும் அவருக்குக் கோபம் வந்தது. என்ன இருந்தாலும் குமரிமேல் கோபம்கொள்ளலாமா? அது தவறாயிற்றே.

"இந்தக் கிழவனைப் பார்த்துக் கேட்கும் வள்ளிக்குமரியே... இது தான்" என்று ஒரு மாதிரியாக, இந்திரன் அகலிகையைப் பார்த்ததுபோல், பிரம்மன் பார்வதியைப் பார்த்ததுபோல், விஷ்ணு பிருந்தையைப் பார்த்ததுபோல் பார்த்தார்......

பாவம் அவளுக்கு என்ன தெரியும்,அதன் பொருள்-இவர்தானே புராணங்களைத் திரும்பத் திரும்பப் படிக்கிறார். பக்தி சிரத்தையோடு அல்லவா படிக்கிறார். இவருக்குத் தான் தெரியும், இவர்பேசிய பேச்சின் பொருள். மருதாயி "என் பெயர் வள்ளி இல்லை தாத்தா மருதாயி" என்று சொல்லிக் கொண்டே போய்விட்டாள். கிழவர் ஏதோ யோசித்தார்; சிறிது நேரம் நின்றார். எதிரே இருந்த வார்டில் ஒரு நர்ஸ் டக்... டக்... என்று நடப்பது கேட்டது; அப்போதுதான் நினைவுக்கு வந்தது. அவருடைய மனைவியைப்பற்றி. மெத்தையில் உள்ள ஸ்பெஷல் வார்டுக்குப் போய்விட்டார்.

மருதாயி உள்ளே சென்று எல்லாம் விசாரித்து, தான் இரத்த தானம் கொடுப்பதாகச் சொன்னாள். இரத்த பரிசோதனையிலிருந்து படிப்படியாக நடக்க வேண்டியவைகள் எல்லாம் நடந்தன. கடைசியாக அவளுக்கு ஒரு டம்ளர் நிறைய ஹார்லிக்ஸ்-ம் கொடுக்கப்பட்டது. குடித்துவிட்டு ரூபாய் வாங்க வந்தாள்.

மருதாயி, மாட்டுவண்டிக்காரன் மனைவி யென்றாலும், அவள் அழகுக்குக்குறைச்சல்இல்லை.இயற்கையாகவே கருத்திருக்கும் இறப்பைகளால் அவள் கண்கள் கருவண்டு போல் இருந்தன. தடித்த கீழ் உதடு துடிக்கும்போது பார்த்தால் பார்ப்போரின் இதயத்துடிப்பு நின்றுவிடும் போல் இருக்கும். சுருங்கச் சொன்னால் அவள் ஒரு அப்பழுக்கற்ற செப்புச் சிலைபோல் இருந்தாள். இந்தச் செப்புச் சிலை, காசு வாங்கவேண்டிய இடத்தில் கை நீட்டியதும், அங்கிருந்த அவனுக்கு மின்சாரம் தன் உடலில் பாய்வதுபோல் இருந்தது. ஒரு கணம் யோசித்தான்...... பிறகு ஏதோ உரத்தகுரலில், "உன்பேர் என்ன? உன் அட்ரஸ் என்ன என்றான். "அதெல்லாம் எதற்கு... அதுதான் முதலிலேயே சொல்லி விட்டேனே"

"இங்கேகூட ஒரு தடவை சொல்லணும், துட்டு கொடுக்கிற துக்கு கணக்கு எழுதவேண்டாமா?"

அவள் தன் பெயரும் அட்ரசும் சொன்னாள். அவனும் ஏதோ எழுதிக்கொண்டு, அவளைப் பார்த்தபடி ரூபாயை எண்ணி அவள் கையில் வைத்து மெதுவாக அழுத்தினான்.

"என்னய்யா அப்படி பார்க்கிறே—என் நெற்றியிலே குங்குமம் சரியாயில்லையா அல்லது ஏதாவது கை பார்த்து ஜோசியம் சொல்வது போல முகம்பார்த்து ஜோசியம் சொல்றியா"

"உம்... அதுவும்...... தெரியும். அகத்தின் அழகு முகத்தில் தெரியுதே" என்று சொல்லிக்கொண்டிருந்த போதே அவள் போய் விட்டாள்.

அவனும் அந்த இடத்தைவிட்டு வெளியே வந்து அவள் போன வழியையே பார்த்துக்கொண்டு நின்றான். போன மருதாயி அவசர அவசரமாகத் திரும்பி ஓடிவந்தாள். அவள் ஓடிவரவே இவனிடம் தான் ஏதோ ஆசையாகப் பேச வருகிறாள் என்று நினைத்துக் கொண்டான்.

அந்த நேரத்தில் செல்லப்பன், யாரோ தன் சிநேகிதன் ஒரு விபத்தில் அகப்பட்டுச் சிகிச்சைக்காக வந்திருப்பதைக் காணவந்தான். அவன் அந்தப்பக்கம் போன போது தொலைவில் மருதாயி போவதைப் பார்த்துவிட்டான். உடனே இவள் ஏன் இங்கு வந்தாள் என்று யோசித்தான். கூப்பிடலாமா என்று எண்ணினான். பிறகு என்ன தோன்றிற்றோ, மெதுவாக ஒரு சுவர் ஓரமாக அவள் பின்னாலேயே தொடர்ந்து சென்றான்.

மருதாயி அந்த ஆளிடம் வந்ததும், "என்னய்யா முகராசி பார்க்கற ஜோரிலே எட்டு ரூபாய் கொடுத்துட்டியே இந்தா ஒரு ரூபாய்..." என்று நீட்டினாள்

"அடடே எட்டு ரூபாய்தானே சரியாகத்தான் கொடுத்தேன். எனக்குத் தெரியும் — உன் முக விலாசத்துக்கு எட்டென்ன, எட்டு இலட்சமே கொடுக்கலாமே!"

"யோவ்! என்னய்யா நீ சொல்வது ஒன்றும் புரியவில்லே"

"எப்படிப் புரியும்—நீ படிக்காத பொண்ணு; என்ன இருந்தாலும் பெண்களுக்கு புத்திகட்டைன்னு சொல்லுவாங்களே! பரவாயில்லே அடீவான்சா வச்சுக்கோ..."

"ஏதுக்கய்யா அடீவான்சு..."

"என்ன மருதாயி......நீதானே இப்போ சொன்னே அடுத்த மாதத்திலே மறுபடியும் இங்கே வந்து இரத்ததானம் தருவேன்னு. உன் பேச்சில் எனக்கு நம்பிக்கை இருக்குது.........போ, வச்சுக்கோ ஒரு ரூபாயை......"

"அடசே!... கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைக்கிறாப்போலிருக்கு...யோவ் ......இப்பத்தான் தெரியுது உன் சமாசாரம், இந்தா உன் ரூபாய்..." என்று வீசிவிட்டுப் போய்விட்டாள்.

தூரத்திலிருந்த செல்லப்பனுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவள் கையிலே ரூபாய். அவன் மருதாயியைப் பார்த்த பார்வை அப்போதே அங்கே ஒரு இரண்டு பேரையும் ஏதாவது செய்துவிடலாமா என்றுகூட யோசித்தான். அல்லது மருதாயியையாவது கூப்பிட்டுக் கேட்கலாமா என்று யோசித்தான். பிறகுதான் அவனுக்கு தோன்றிற்று. இதைச் சிறிது வளரவிட்டுப் பார்ப்போம். பிறகு கவனித்துக்கொள்ளலாம் என்று. அவன் என்ன செய்வான் பாபம். காலையில் ஓரணா இட்டிலியுடன் அரையணா டீ குடித்துவிட்டு அந்த ஓரணாப் பேப்பர் படிக்கிறவர்கள் பரம்பரை ஆயிற்றே! அவனுடைய எண்ணமெல்லாம் அன்றைய தினம் படித்த "சோரம்போன சொர்ணத்தின்மேல்தான் இருந்தது" "பேப்பரிலே சொர்ணம், எதிரே மருதாயி" இப்படி ஏதேதோ நினைத்துக்கொண்டு போய்விட்டான்.

மருதாயி அங்கே ரூபாயை வாங்கிக்கொண்டு நேரே டாக்டரிடம் கொடுத்துவிடலாம் என்று யோசித்தாள். பிறகு அவளுக்கு என்னவோ எண்ணம் வந்தது. வீட்டிற்கு ஓடோடி வந்தாள். ஏதோ அரைகுறையாகச் சாப்பிட்டுவிட்டு, குழந்தையைச் சுத்தமாக வெந்நீரால் துடைத்து ஒரு துவைத்த சட்டையைப் போட்டு எடுத்துக்கொண்டு ஆஸ்பத்திரி நோக்கிப் போனாள். போகும் வழியில் எதிரே.

"சாத்துக்குடி — சாத்துக்குடி" என்று ஒருவன் பழம் விற்றுக் கொண்டு வந்தான்"

மருக்கொழுந்து "அம்மா பழம்" என்று கேட்டது. அவளுக்கும்

அப்போதுதான் காலையில் செல்லப்பன் கொடுத்துவிட்டுப்போன நாலணா தன் முந்தாணையில் முடிச்சுப்போட்டது நினைவுக்கு வந்தது.

பழக்காரனைக் கூப்பிட்டு விலை கேட்டாள். ஏதோ திடீரென்று யோசித்தாள்; நாலணாவுக்கு நான்கு பழங்கள் வாங்கினாள்.

ஒன்றை உரித்து மருக்கொழுந்துக்கு கொடுத்தாள். ஆஸ்பத்திரியும் வந்துவிட்டது. உள்ளே நுழைந்தாள் மற்றொருபுறமாக; நேரே அந்த டாக்டரைத் தேடிச் சென்றாள். ஒரு வார்டுக்கு வந்தாள்......சிறிது தயங்கித் தயங்கி எட்டிப்பார்த்தாள்..... அங்கிருந்த நர்ஸ் 'என்னவேண்டும்' என்றாள்.

"டாக்டர் வேண்டும்" என்று மருதாயி சொன்னபோதுதான், நர்சும் இவளை உன்னிப்பாகக் கவனித்தாள் பிறகுதான் நினைவு வந்தது. "ஓ, நேற்று ஏழு ரூபாய் கொடுத்தாரே, அவளா" என்றாள். "ஆமாம் அவரேதான்" என்று சொன்னபோதுதான் மருதாயிக்கு தான் நேற்றுப் பார்த்த நர்ஸ் என்ற நினைவு வந்தது.

"எதிரே இருக்கும் வார்டிலிருக்கிறார், இவள்தான் உன் குழந்தையா" என்று குழந்தையின் கன்னத்தை வருடினாள்;

"ஆமாம் நர்ஸம்மா...வணக்கம் நான் போய்ப் பார்க்கிறேன்" என்று எதிரேபோய் அங்கிருந்த நர்ஸிடம் சொல்ல, டாக்டர் வெளியே வந்தார்.

டாக்டர் வந்ததும் மருதாயி "டாக்டர் உங்களுக்குக் கோடி புண்ணியம், நீங்கள் நேற்றுக் கொடுத்த ஏழு ரூபாய் என் மகளையே காப்பாற்றியது. நீங்கள் நேற்று ரூபாய் கொடுத்திராவிட்டால் இன்று நானும் மகளுமாக இங்கு வந்திருக்க முடியாது. மருக்கொழுந்து, டாக்டர் காலிலே விழுந்து கும்பிடு" என்று இறக்கி விட்டாள். குழந்தையும் அவர் காலில் விழுந்து எழுந்தது.

டாக்டர் அன்புள்ளம் கரை புரண்டு ஓட, குழந்தையை எடுத்து அணைத்துக்கொண்டார்.

"டாக்டர், இந்தாருங்கள் நீங்கள் கொடுத்த ஏழு ரூபாய். என்னுடைய மனமார்ந்த நன்றி"

"நன்றி அம்மா...நன்றி" என்று வாங்கிக்கொண்டே குழந்தையைப் பார்த்து "உன் பேர் என்ன?"



"அவள் பேர் மருக்கொழுந்து டாக்டர்"

"மருக்கொழுந்து நீ என் வீட்டிற்கு வர்றியா"

"ஊம்" என்று மருகொழுந்து தலையசைத்தது.

"நான் உனக்கு பழம், மிட்டாய், சொக்காய் எல்லாம் வாங்கித் தருகிறேன்"

டாக்டர் பழம் என்றதும், மருக்கொழுந்து அவள் அம்மாவைப் பார்த்து "அம்மா பழம்" என்று கேட்க அவள் உடனே மடியிலிருந்த பழங்களை எடுத்து "டாக்டரிடம் கொடுக்கவேண்டுமே, இவள் கேட்கிறாளே எப்படிக்கொடுப்பது" என்று யோசித்துக்கொண்டிருக்க மருக்கொழுந்து அதை அவள் கையிலிருந்து பிடுங்கி டாக்டரிடம் கொடுத்தாள். மருதாயிக்கு உள்ளம் குளிர்ந்தது. குழந்தையின் உள்ளம், எவ்வளவு அன்புள்ள தாய் இருக்கிறது என்று யோசித்துக்கொண்டே "நீயே சாப்பிடு மருக்கொழுந்து" என்றார் டாக்டர்.

"டாக்டர் உங்களுக்குத்தான் வாங்கிக்கொண்டு வந்தேன்."

"ஏன்? என் ஏழு ரூபாய்க்கு வட்டியா"

"ரூபாய்க்கு வட்டியல்ல; உங்கள் அன்புள்ளத்திற்கு எங்கள் எளிய பரிசு"

"நன்றி அம்மா...இருந்தாலும் பரவாயில்லே.......ஒரு மனிதனுக்கு செய்யமுடியாத உதவி ஒன்றும் நான் செய்துவிடவில்லை..." அப்போது நர்ஸ் வந்து, டாக்டர் பேஷண்ட் பெட்நம்பர் இருபத்து மூன்று உங்களை கூப்பிடுகின்றார். டாக்டருக்கு அப்போதுதான் நினைவு வந்தது ஏறக்குறைய ஒரு அரைமணி நேரம் பேசிக் கொண்டிருந்தாரென்று. மருதாயியும் "நாங்கள் போய்விட்டு வருகிறோம் டாக்டர், உங்களை என்றும் மறக்கமாட்டோம்"

"நன்றி அம்மா...வணக்கம்...... ஒரு வேண்டுகோள்; நீங்கள் தவறாக நினைக்கவில்லை என்றால் இந்தக் குழந்தையை அடிக்கடி எனக்கு அழைத்து வந்து காட்டுகிறீர்களா...இல்லையென்றால் உங்கள் விலாசம் தந்தால் நானே வருகிறேன்" என்றார்.

"நான் மண்ணடிக்கு அடுத்த இடைச்சேரியில் இருக்கிறேன்— என்பெயர் மருதாயி..." மருக்

கொழுந்தைக் காட்டி "இவ அப்பாபேரு......செல்லப்பன்" என்று இழுத்துக்கொண்டே சொன்னாள்.

"சரி அம்மா, வணக்கம்" என்று சொல்லிவிட்டு டாக்டர் உள்ளே போய்விட மருதாயியும் குழந்தையைத் தூக்கிக்கொண்டு போய் விட்டாள்.

அன்று மாலை மருதாயி குழந்தையை வீட்டில் விட்டுவிட்டு ஏதோ பக்கத்துத் தெருவுக்குப் போயிருந்தாள். அப்போது அங்கு ஒரு கார் அந்தத் தெருவழியாக வந்து ஓரிடத்தில் நின்றது. பிறகு யாரோ ஒருவர் "யார் வேண்டும்" என்று கேட்க — "செல்லப்பன் வீடு எது" என்று உள்ளிருந்த டாக்டர் கேட்டார்.

"அதோ தெரியுதுங்களே, இரண்டாவது லைட் கம்பம், அதற்கு அடுத்த குடிசைங்க" என்று சொல்வதற்குள் அந்தச் சேரி மக்கள் யாவரும் அந்தக் காரைச் சூழ்ந்துகொண்டனர்.

ஒரு சிலர் "டேய் செல்லப்பனுக்கு என்னவோ கெட்டகாலம் —கார்லே வந்து தேடிவிட்டு போறாங்கோ — ஒரு சமயம் போலிஸ்காருங்கதான் இப்படி ஆம்பிடையான் பொண்டாட்டி வேஷம் போட்டுகிட்டு தேடிகிட்டு வரோங்களோ என்னமோ—டேய் தம்பிங்களா ஜாக்கிரதையா இருக்கனும்" என்று தங்களுக்குள்ளாகவே பேசிக்கொண்டனர்.

கார், லைட் கம்பத்துக்கு அடுத்த குடிசையின் பக்கம் வந்து நின்றது. டாக்டர் ஹாரன் அடித்தார், உள்ளிருந்து யாரும் வரவில்லை. அழுக்குப் படிந்த கைகால்களுடன் மருக்கொழுந்து ஓடிவந்தது. டாக்டர் உடனே இறங்கி தூக்கிக்கொண்டு குழந்தையை. அந்தக் கார். அவர்மனைவியும் இறங்கிவந்தார். மனைவியைப் பார்த்து டாக்டர்,

"பார்த்தாயா பார்வதி—இவள் தான் நான் சொன்ன மருக்கொழுந்து—எனக்குப் பழம் வாங்கிக்கொண்டுவந்து கொடுத்தாள்" என்று அணைத்துக்கொண்டே முத்தமிட்டார்.

அவருடைய வெண்மையான சட்டையெல்லாம் புழுதிபடிந்து அழுக்காகிவிட்டது.

"எங்கேம்மா அம்மா" என்று கேட்டுக்கொண்டிருந்தபோதே,

தூரத்திலேயே கார் நிற்பதைப் பார்த்த மருதாயி "இதோ வந்துட்டேனுங்க டாக்டர்" என்று சொல்லிக்கொண்டே மேல்மூச்சு வாங்க ஓடிவந்தாள்.

டாக்டர் தன் மனைவிபக்கம் திரும்பி "இவள்தான் மருக்கொழுந்தின் தாயார்—மருதாயி" —என்று மருதாயிபக்கம் திரும்பி "என் மனைவி பார்வதி" என்று சொன்னார்.

"வணக்கம் அம்மா...வாங்க... உள்ளே வாங்க......எங்க குடிசையிலே உங்களுக்கு உட்கார ஒரு நல்ல பாய்கூட இல்லே" பங்களாவில் வாழும் உங்களுக்கு..."

"பங்களாவில் வாழும் எங்களுக்கு எல்லா வசதியும் இருக்கிறது; உண்மைதான். ஆனால் இதைப்போல் மழலைச் செல்வம் இல்லையே" என்று கண்ணீர் மல்க மருக்கொழுந்தை எடுத்து அணைத்துக்கொண்டாள் டாக்டர் மனைவி பார்வதி.

இதைக் கண்ட மருதாயிக்கு அப்போதுதான் தெரிந்தது டாக்டருக்கு குழந்தைகள் இல்லை என்பது.

"ஏனம்மா உங்களுக்கு குழந்தைகள்......"

"ஒரு குழந்தைபிறந்தது. பெண்தான். பெயர் அல்லி என்று வைத்தேன். மொட்டு பூவாகி, எங்கள் இல்லமெல்லாம் மணம் வீசுமென்று நினைத்தேன். ஆனால் மொட்டிலேயே கருகிவிட்டது...... ஏறக்குறைய இன்று இருந்தால் இவளைப்போல்தான் இருப்பாள் ...முகச்சாயல் ஏறக்குறைய அது போன்றே இருக்கிறது. இவளை யும் நன்றாகக் குளிப்பாட்டிப் பட்டாடை உடுத்தினால் அல்லி போலாகிவிடுவாள்" என்று சொல்லிக்கொண்டே மருக்கொழுந்தின் கன்னத்தில் முத்தமிட்டாள். டாக்டர் உடனே வெளியே சென்று காரிலிருந்து ஏதோ பொட்டலத்தை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு இன்னும் சிறிதுநேரம் இருந்தால் எங்கு தன் மனைவிக்கு பழைய எண்ணங்கள் வந்து அதிகமாக அழ ஆரம்பித்துவிடுவாளோ என்று பயந்து, அவளை அழைத்துக்கொண்டு, மருதாயிக்கும் நன்றி தெரிவித்துவிட்டுப் போய் விட்டார்.

[அடுத்த இதழில் முடியும்.]

# புரட்சி

—[அல்லி]—

என் பெயர் புரட்சி. நான் பழைய, செல்லரித்த, மக்கிப் போன அழுகிய எண்ணங்களை எரித்து நீறுக்கி விட்டுப் புது வாழ்வை அமைப்பவள். நான் அழிவற்ற இளமையின் அடிப்படை; முதுமையை அழிப்பவள். நான் எங்கே இருக்கிறேனே, அங்கேதான் வாழ்வும் இருக்கிறது; சாவும் இருக்கிறது. சமுதாயக் கொடுமைகளால் துன்புற்ற மக்களுக்கு நான் நம்பிக்கைக் களஞ்சியமாவேன். நான் அவர்களது மறுமலர்ச்சியின் இனிய கனவாவேன். கிழவர்கள் என்னைக்கண்டு அஞ்சி நடுநடுங்குகின்றனர்; இளைஞர் என்னை உவகையோடு வரவேற்கின்றனர். நான் எங்கே செல்கின்றேனே அங்கே குப்பை கூளங்கள் நீங்கி, தூய ஒளி சுடர் விடுகின்றது. நான் சமுதாயக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்து, துன்புற்ற உள்ளங்களுக்கு ஆறுதல் தருகிறேன். தாழ்ந்து கிடக்கின்றவர்களின் விலங்குகளைத் தகர்த்து, அவர்களுடைய உரிமைகளை அவர்களுக்கு அளிக்கிறேன்; அவர்களுக்கு அமுதச்சாற்றைப் பருகக் கொடுக்கிறேன்.

நான் நிகழ் காலத்தை அழித்துப் பெரும் பேறுமிய எதிர் காலத்தை உருவாக்குகிறேன். இதுதான் வாழ்க்கையின் பண்டைத் தத்துவம். நான் அந்தப் பண்டை வழக்கத்தைக் காத்து வருகிறேன். இதனால் சமுதாயத்தில் புதுமையும் புதிய ஊக்கமும் ஏற்படுகின்றன.

நான் இயற்கை அன்னை. புயல், சூறுவளி மூலம் பழைமையை வேரோடு பிடுங்கி, புதுயுகமெனும் வண்ண மலர்களால் உலகப்பூங்காவை அழகு செய்கிறேன். நான் சமுதாயத்தின் எல்லாக் கொடுமைகளையும் — அவை தன்னலமுள்ள கொடியவர்களின் படைப்பாதலால் — ஒழித்துவிடுகிறேன். இக்கொடுமைகளின் அடிப்படை, கெடுதலே. மேலும் இவற்றின் பலனும் கேடுகளைப் பெருக்குவதே. இக் கொடுமைகளால் சமுதாயத்தில் பெரும் தொல்லைகளும், பெரிய பெரிய அக்ரமங்களும் நடைபெறுகின்றன.

எச்சரிக்கை செய்கிறேன்! உங்கள் கொடுமைக் குடம் நிரம்பிவிட்டது. நான் கொடியவர்களுக்குத் தண்டனை வழங்கும் பயங்கரப் புரட்சி. நச்சுப்பயிரை அழிக்கும் நேரம் வந்துவிட்டது; உயர்வு தாழ்வு மனப்பான்மையை அழிக்கும் நேரம் வந்துவிட்டது; தீண்டாமையை ஒழிக்கும் நேரம் வந்துவிட்டது, என்னிடம் புரட்சிக் கொம்பு உள்ளது; என்னிடம் கூட்டுறவின் சங்கு இருக்கிறது. நான் எல்லாவகையான ஏமாற்று வேலைகளையும் அழிப்பவள். எல்லா வகையான மூட நம்பிக்கைகளையும் ஒழிப்பவள்.

நினைவு வைத்துக்கொள்ளுங்கள்; நான் பொய்யர்களின் பெரும் பகையானவள். புரட்டர்களுக்கும் எத்தர்களுக்கும் மோசக்காரர்களுக்கும் நான் பயங்கர இடி போன்றவள். நான் 'தேவவாணி'யின் ஆதிக்கத்தைச்சுக்கு நூறுக்கி பகுத்தறிவு ஆட்சியை நிலைநாட்டுவேன். ஒருவன் பலரை ஆளும் உரிமையை நான் அடியோடு ஒழித்துவிடுவேன். நான் சோம்பேறிகள், சாப்பாட்டுராமன்கள், மதத் தரகர்கள் ஆகியோரின் ஆட்சியை மண்ணேடு மண்ணாக்கி விடுவேன். நான் விலங்குத் தன்மையின் கர்வத்தைத் தூள் தூளாக்கி, நன்னடத்தை, நேர்மை ஆகியவற்றின் ஆட்சியை ஏற்படுத்துகிறேன்; இயற்கையை ஆத்மாவின் அடிமையாக்குவேன். ஆணவக்காரர்கள், தண்டச்சோற்றுக்காரர்கள் ஆகிய 'பெரிய' மனிதர்களின் குற்றங்களை ஒழித்துக்கட்டிவிட்டு உழைப்பும்நேர்மையும் மிகுந்த தொழிலாளர்களை உயர்த்துவேன். சாத்திரத்தின் பெயரை வைத்துக்கொண்டு கொள்ளையடிக்கும் அகம்பாவத்தை அழிப்பது என் வேலையாகும். ஒவ்வொரு ஆணையும் பெண்ணையும் நான் தன்னம்பிக்கை உள்ளவர்களாக்குகிறேன். அனைவரும் தன் பொருட்டுத் தானே சிந்திக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். நான் தன்முயற்சியைக் கற்பிக்கிறேன்; ஒவ்வொரு மனிதனையும் தன்னைத்தானே ஆள்பவனுக்குகிறேன். ஏனெனில் தன்முயற்சியே தன்னுட்சியாகும்.

நான் சுதந்திரத்தாய், எல்லா வகையான அடிமை விலங்குகளையும் உடைத்தெறிபவள், நான் அனைவரையும் சுதந்திரர்களாக்குகிறேன். ஏனென்றால் சுதந்திரமே தூய்மையானது, சுதந்திரத்தை விட உயர்வானது வேறென்றும் இல்லை. நான் சாதிக் கட்டுப்பாடுகளை உடைத்து, சமுதாயத்திற்கு விடுதலை அமுதை ஊட்டுவேன். பல நூற்றாண்டுகளாக அமுக்கிக் கொண்டிருக்கும் குருதியை அகற்றி, சமுதாயத்தின் நாடியில் புதுக் குருதியைப் பாய்ச்சுவேன்.

நான் செயலின் வழிகாட்டி. பிறப்பின் ஒழுங்கினத்தை நாசமாக்குபவள், நல்லியல்பாலும் செயலாலும் நான் சமுதாயத்தை நடத்துகிறேன். தகுதி படைத்தவரை அரியணையில் ஏற்றுவேன். சோம்பேறியை, தகுதியற்றவனைக் கீழே தள்ளி விடுகிறேன். நான் செயலுக்குத்தக்க பலன் அளிக்கும் 'விதி' ஆவேன். ஆண்மையும் உழைப்பும் மிக்க மனிதர்கள் என் வாழ்த்தைப் பெறுகிறர்கள்; உழைக்காதவரும் கால் மேல் கால் போட்டு உட்கார்ந்திருப்பவரும் என்னிடம் அடி வாங்குகிறர்கள். நான் தொழிலைப் பொறுத்து அமையும் பிரிவுகளை நிலைநாட்டுவேன். நான் கொடுமைகளை அடித்துச் செல்லும் கங்கையின் பெருவெள்ளம். என் வழியில் நிற்கும் கேடுகளைக் கடலில் இழுத்துச் சென்று ஒரேயடியாக மறைத்துவிடுவேன்.

என் பெயர், சமுதாயப் புரட்சி. நான் நூற்றாண்டுகளாக இருந்து வரும் கெட்ட வழக்கங்களை அகற்ற வந்துள்ளேன்; பொதுமக்களிடையே உள்ள அசையாத மூடநம்பிக்கையை நீக்க வந்துள்ளேன்; சிலர் பலரை அடக்கியாள்கின்ற உரிமையை நீக்க வந்துள்ளேன்; கடவுளின் பிரதிநிதிகளின் ஆதிக்கத்தை ஒழிக்க வந்துள்ளேன்; நான் பொதுமக்களுக்கு உண்மையான, எளிய அறவழியைக் காட்ட வந்துள்ளேன். சமுதாயத்தில் அனைவர்க்கும் நியாயம் கிடைக்க வேண்டும், வாரிசுத்தும் வஞ்சனை கூடாது என்பது என் குரல். நான் பொதுவுடைமைக் கொள்கையின் நேர்மையான பிரச்சாரிகை. என் கொடி சமத்துவம், சகோதரத்வம். கோடிக்கணக்கானவர் சிறுபான்மையோரின் கீழ்ப்படிந்துள்ள நிலைமையை ஒழித்துக்கட்டுவேன். ஏனெனில் அச்சிறுபான்மையோர் பணத்திற்கடிமையாகி, சமுதாயத்தில் கொடுமையைப் பரப்புகின்றனர். ஒற்றுமைக்குத் தடையாகவும்; உண்மை, நேர்மை ஆட்சியை ஏற்படுத்தவிடாமலும் இருக்கின்ற தீமைகளினின்று சமுதாயத்தைத் தூக்கிவிட விரும்புகின்றேன். நான் கைம்பெண்களின் கண்ணீரைத் துடைத்து, அவர்களுக்கு உவகைச் செய்தியைச் சொல்ல வந்துள்ளேன். அபலைகளைத் துன்புறுத்துகின்ற கொடியோர் இனி எச்சரிக்கையோடு இருக்கட்டும். என் கைத்தடி மிக அஞ்சத்தக்கது. நான் அனுதைகளை, துன்புற்றோரைக் காப்பேன். துட்டர்களுக்குக் கடுந்தண்டனை அளிப்பேன்.



கொடுமையால் தாக்கப்பட்டுள்ளோரே! எழுங்கள்! தீண்டத்தகாத சிறுவரே! எழுங்கள்! கைம்பெண்களே, விழித்துக்கொள்ளுங்கள்! என் ஆனந்தச் செய்தியைக் கேளுங்கள்! நான் இப்போது பழைய சமுதாய இயந்திரத்தை உடைத்து, புதிய அமைப்புண்டாக்கி, எல்லோர்க்கும் முன்னேற்றக் கதவைத் திறப்பேன். யார் என் படையில்சேர்ந்து தொண்டர்களாகிறர்களோ, அவர்கட்கு இன்பம் கிடைக்கும். ஆகவே மகிழ்ச்சிக்குரல் எழுப்பியவாறு எல்லா வகையான ஐயங்களையும் விடுத்து என்னைப்பின்பற்றுங்கள். எனக்கு எவரும் சிறியவரோ பெரியவரோ அல்ல; அனைவர்க்கும் நான் சமமான வகுப்பு அளிப்பேன்; என்னேடு வந்து என்படை வீரராகி, மனித சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கும் மறுமலர்ச்சிக்கும் என்னேடு ஒத்துழைப்பவர்தாம், தம் வாழ்க்கையைப் பயனுள்ளதாக்கி, இன்பத்தைப் பெறுவர். என்னை எதிர்த்து, என் வழியில் தடைபோடுவோரை நான் இரக்கமின்றிக் கசக்கி எறிவேன். ஏனெனில் கொடியவர்களை அழிக்கும், துட்டர்களைஎரிக்கும், பழைய மக்கிப்போன முறைகளை நீக்கும் புரட்சி நான். நான் வாழ்க்கை—உற்சாகத்தின், முன்னேற்றத்தின் ஊற்று.

★

# மாணவர்களிடையே நாம்

❋—○—❋

மலர்ச் சோலையிலே மணம் கமழ்கிறது. அடுத்துள்ள சாலையிலே சகதியின் நாற்றம் சோலையின் சீரைக் குலைக்க நினைக்கிறது. ஆனல் பொன்வண்டுகள் பூச்செண்டுகளை நாடி சோலைக்குச் செல்கின்றனவே தவிர, சாலைக்கு அல்ல. சாலையின் வழியே செல்வதால் 'நம்மை நாடித்தான் வருகிறது' என்று சாலை நினைத்தால் அறியாமை, ஏமாற்றம் என்று தான் சொல்லமுடியும்.

அறியாமையிலிருந்து அறிவாற்றல் வளரும்; ஆனல் அறிவாற்றலிலிருந்து அறியாமை தலைதூக்க முடியாது.

அறியாமையில் சிக்கியவர்களைக் கண்டு ஆனந்தப்படுவதும், மற்றவரும் தம்மை நாடுவர் என்று மனப்பால் குடிப்பதும், சாலை நினைத்த கதையாக முடிந்துவிடும். அறிவுச் சோலைக்கு செல்வது உறுதியும் ஆகும்.

நம் தூய இலட்சியங்களினல் வளர்மதிபோல வளர்ந்து வருகிறேம். இதனை மக்கள் உணர்வர். ஆனல் இதற்கு வக்கற்றவர்களானும், மாற்றன் வாழ்ந்தாலும் உற்றன் வாழக் கூடாது எனும் மனம் படைத்தோராலும் சில பல மக்கள் உணராமலேயிலும் உள்ளனர்.

ஆனல் அவர்களையும் உணரவைக்கும் உள்ளம், உறுதி தூய்மை நம்மிடம் உண்டு. எனவேதான் மாற்றரின் ஏசுதலைத் தாங்கி, மாசுகளைக் கண்டு மருளாது, மங்காது மக்கள் மத்தியிலே ஏற்றிய விளக்கென ஒளி விடுகிறேம். அவர்கள் கூறும் இழி பழிகளை நேர்மையற்றவை என்று எடுத்துரைத்தும் வருகிறேம்.

மாணவர்களிடையே சிந்திக்கும் ஆற்றலை, சீர்திருத்த நோக்கங்களை நம்மால்தான் வளர்க்க முடிந்தது என்றல் அது மிகையாகாது. இதை மாணவர் மன்றம் உணரும். பதினெண் கீழ்கணக்கைப் பாருங்கள், படியுங்கள்; கலிங்கத்துப் பரணியைக் காணுங்கள், கல்லுங்கள்: குறளின் பெருமையை உணருங்கள், உணர்த்துங்கள் என்று, மாணவர்கள் முன்னே முரசொலித்துத் தமிழ் முழக்கம் செய்வோர் நாம்தான். இதனல் மாணவர்கள் கெட்டுவிடுவர் என்று நல்லவர் கூற மறுப்பர். ஏடுகளைத் தந்தே நாடுதனைத் திருத்திவருவோரும் நாம்தான். நாம் மாணவர்களின்பால் கொண்டுள்ள பொறுப்பு அதிகமானது என்பதால்தான் மாணவர் படையே நம் கழகத்தின் ஒரு அங்கமாக விளங்குகிறது.

மாணவர்களைப் பார்த்து "மாணவர்களே நாளுக்கொரு போராட்டம் நடத்துகிறேம் பாரீர்! ஆளுக்கொரு கொடியோடு வாரீர்! என்று கூறியது கிடையாது. மாருக, நம் தூய கொள்கைகள் மட்டும் அவர்கள் மனதிலே இடம் பெற்றுவிட்டன. நம்முடைய கொள்கைகள் மாணவர்களுக்கு நல்லெண்ணத்தையும், விடா முயற்சியையும், உறுதியையும், திறமையையும் வளர்த்து வருகின்றன என்பதை நம்மால் நிரூபிக்க முடியும். அதனல்தான் நம்மைப் பின்பற்றும் மாணவர்கள் எதிலும் பிற்போக்கின்றிக் காணப்படுகின்றனர். ஏசத்தெரிந்திருக்கமாட்டார்கள். ஆனல் அழகுறப் பேசத்தெரிந்திருப்பர், நல்லாட்சிக்கு நாவன்மை தேவை என்று உணர்ந்த காரணத்தால். "கத்தியைத் தீட்டுவதைவிட புத்தியைத்தீட்டுவது நலம்" என்பது அறிவர். 'சேனை முனையில் காணாத வெற்றி பேனமுனையில் காணமுடியும்' என்பதற்கேற்ப எழுத்தாளர் பட்டியலில் இடம் பெறக் கூடியவர்களாக இருப்பர்.

"நல்லார் ஒருவருக்கு செய்த உபகாரம் கல்மேல் எழுத்துபோற் காணுமே" என்ற முதுரைப்படி மாணவர்கள் நம் கொள்கைகளைத் திக்கெட்டும் தேன் சொட்டும் செந்தமிழில் எடுத்துரைக்கின்றனர். இது நம் திறமையினல்தான் ஏற்பட்டது என்று கூறமாட்டோம்.

திறமை தூய்மையை வளர்க்காது; ஆனல் நம் தூய கொள்கைகள்தான் திறமையை மாணவர்களுக்கு அளித்திருக்கின்றன. நமக்கும் தந்திருக்கின்றன.

எனவே மாணவர்களிடையே நாம் கொண்டுள்ள பொறுப்பு சாலச் சிறந்தது. இதனை மாணவர் மன்றமும், மக்கள் மன்றமும் உணரும், உணர்த்தும், தமிழகமே நம்மைப் பின்பற்றிச் செய்யும் என்பதனை நாம் நன்கு அறிவோம்; சலிப்பின்றிக் கடமைகளைச் செய்வோம்; அதிலேயே களிப்பும் கொள்வோமாக.

—இரெ. தென்னவமணி.

# புகாரே எம் ஊர்

(தமிழவேள்)

ஒரு கடற்கரை. அங்கே புன்னை மரங்கள் நிறைந்துள்ளன. அம் மரங்களுக்கு அது பூக்குங்காலம். ஆகையால் அரும்பையும் பூவையும் இணர் இணராகப்பெற்று அவை அழகோடு விளங்குகின்றன. மரங்களிலிருந்து உதிர்ந்த மலரும் அரும்பும் மணற்பரப்பைக் கூட மலர்மயமாகக் காட்சியளிக்கச் செய்துள்ளது.

அந்த அழகான கடற்கரைக்கு ஒரு பெண் குழந்தை விளையாட வருகிறது. தனியாகத்தான். வந்த குழந்தை அலைகளால் நனைக்கப்பட்டு ஈரமாகியுள்ள மணலில் ஒரு வீடு கட்டுகிறது. நீண்ட நேரமாகக் கட்டி முடித்த தன் மணல் வீட்டைப்பார்த்துப்பார்த்து மகிழ்கிறது. இந்த உலகத்தில் மக்களுடைய மகிழ்ச்சிதான் நிலைத்து நிற்பதில்லையே! பெரிய அலை ஒன்று கரைநோக்கி வந்தது. வந்த அலை குழந்தையை நனைத்ததோடு, மணல் வீட்டையும் அழித்துவிட்டுப் போய்விட்டது. குழந்தை, தன்னை அலை வந்து தொட்ட உடனே எழுந்து சற்றுப் பின்னால் வந்துவிட்டது. தன் உடைகளை நனைத்த அலை, தான் கட்டிய மணல் வீட்டையும் அழித்துவிட்டுப் போனதைப் பார்த்து மனம் நொந்தது. சினம் கொண்டது.

தெருவில் விளையாடிக்கொண்டிருக்கும் இரு குழந்தைகளிலே ஒன்று மற்றொன்றை அடிக்க வந்தாலோ, அல்லது அடித்தாலோ, அது என்ன செய்கிறது? "அம்மா!" என்று கூக்குரலிடுகிறது. இல்லையேல், "இரு! இரு! என்னையா அடிக்க வருகிறாய்! எங்கள் அம்மாவிடத்திலே போய்ச் சொல்கிறேன்" என்று தன் அன்னையை நாடிச் செல்கிறது. இது குழந்தைகளிடம் காணப்படுகிற இயல்பு. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னமே இந்த அரிய உண்மையைப் புலவர் ஒருவர் தம்முடைய பாடலிலே அழகாக அமைத்துக் காட்டுகிறார்.

குழந்தையினுடைய வீட்டை அலை வந்து அழித்துவிட்டதல்லவா? குழந்தை கடலை நோக்கிச் சொல்கிறது, "இரு! இரு! கடலே! இதோ என் அன்னையிடத்திலே போய்ச் சொல்கிறேன். என்னுடைய அழகான மணல்வீட்டை அழித்துவிட்டா சென்றாய்? இரு! இரு!" என்று தன் வீடு திரும்ப இரண்டு அடி எடுத்துவைத்தது. அதற்குள் அது நினைக்கிறது. "நாம் சும்மாவே சென்று இந்தக் கடல் செய்த கொடுமையைப்பற்றி அம்மாவிடத்திலே சொன்னால், அம்மா ஒருக்கால் "மணல்வீடு தானே போய்விட்டது கண்ணே! போனால் போகிறது. மற்றொன்று கட்டிக்கொள்ளலாம். அந்தக் கடல் இருக்கிறதே, அது பொல்லாததுதான். எத்தனையோ அருந்தமிழ் நூல்களையெல்லாம், தமிழ் நகரங்களையெல்லாம்—தமிழ் நிலப்பரப்பையெல்லாம் அந்தக் கடல் தன்னுள் அடக்கிக்கொண்டதுண்டு. அதைப்பற்றி இன்றுள்ள தமிழர்கள் என்ன கவலையா படுகிறார்கள்? வருந்தாதே!" என்று நமக்கே அமைதி சொல்லிவிட்டால் என்ன செய்வது? என்று குழந்தை அழுகையைத் துணைக்கு அழைத்துக்கொண்டது. இன்னும் இரண்டு அடி எடுத்து வைத்தது வீடுநோக்கி. அழுதுகொண்டே தான்!

நாம் வீட்டிற்குச் சென்று அம்மாவிடத்திலே கடல் செய்த கொடுமையைப்பற்றிச் சொல்லி, அம்மா, தான் செய்யும் வேலையை முடித்துவிட்டு வந்து இந்தக் கடலுக்குத் தண்டனை தர இன்னும் எப்படியும் ஒருமணி அளவு ஆகிவிடும். அதுவரையில் இந்தக் கடல் சிரித்துச் சிரித்துக் குதித்துக்கொண்டுதானே இருக்கும். அன்னை வந்து பெரிய தண்டனையாகத் தருவதற்குமுன் நாமே ஒரு சிறு தண்டனையை இந்தக் கடலுக்குக் கொடுத்து விட்டுச் சென்றால்தான் இதனுடைய கொட்டம் அடங்கும், என்று எண்ணியோ என்னவோ, குழந்தை கடலை நோக்கி எறிவதற்கு ஏதாவது இடைக்குமா எனப் பார்த்தது. கடற்கரையில் கல் ஏது? எங்கும் மணல்தானே!

அப்போது அந்தக் குழந்தைக்குத் தன் கழுத்திலே இருந்த முத்துமாலைதான் கண்ணில் பட்டது. அதிலே இரண்டொரு முத்துக்களை அறுத்துக் கடலை நோக்கி வீசியது. குழந்தை வீசி எறியும் முத்து எவ்வளவு தூரம் செல்லும்? ஒரு அடி தொலைவு கூடச் செல்லவில்லை. அம்முத்துக்கள் மணற் பரப்பிலேயே விழுந்து விடுகின்றன. குழந்தை அழுதுகொண்டே சென்றுவிடுகிறது. ஏற்கனவே புன்னைமரங்கள் உதிர்த்திருக்கும் புன்னைப் பூக்களோடும் புன்னைமரும்புகளோடும் குழந்தை அறுத்தெறிந்துவிட்டுச் சென்ற இரண்டொரு முத்துக்களும் மணலிலே விரவிக்கிடக்கின்றன. இவ்வளவும் காலையிலே நடந்த நிகழ்ச்சி.

மாலையில் அந்தக் கடற்கரைப் பக்கமாக உலவ வந்த ஒருவர், மணற்பரப்பில் புன்னை அரும்புகள் சிதறிக்கிடந்த அழகைக் கண்டபடியே அங்கு செல்கிறார். புன்னை அரும்புகள் முத்துக்களைப் போல் என்ன அழகாக இருக்கின்றன என்று கீழே குனிந்து ஒரு அரும்பைக் கையில் எடுக்கிறார். அதை உற்றுப்பார்க்கிறார். அவருக்கு வியப்பு மிகுகிறது. இது என்ன? முத்தாக இருக்கிறதே! புன்னைமரும்பல்லவே! என்று அப்படியே அயர்ந்துவிடுகிறார். சற்று நேரத்திற்கெல்லாம், கீழே உதிர்ந்திருப்பவை எல்லாம் முத்துக்கள்தானோ என நினைந்தவராய் மீண்டும் குனிந்து இன்னொரு அரும்பை எடுக்கிறார். உற்றுப் பார்க்கிறார். அது முத்தல்ல! அரும்பேதான்! ஒன்றை எடுத்தால் முத்தாக இருக்கிறது. இன்னொன்றை எடுத்தால் புன்னை அரும்பாக இருக்கிறதே, என்று மயங்குகிறார். இப்படிப்பட்ட மயக்கம் விளைவிக்கும் கடற்கரையை உடையதாம் காவிரிப்பூம்பட்டினம். அப்படிப்பட்ட பூம்புகாரே அந்தப் புலவருடைய ஊராம்!

"முன்னைத் தம் சிற்றில் முழங்கு
கடல்தேம் மூழ்கிப்போக
அன்னைக்கு உரைப்பன்! அறிவாய்
கடலே! என்று அழுங்கிப் பேறும்
தன்மை மடவார் தளர்ந்து உகுத்த
வெண்முத்தம் தயங்கு கானல்
புன்னை அரும்பேய்ப்பப் போவாரைப்
பேதுறுக்கும் புகாரே எம் ஊர்"

★



# இரும்புப் பெட்டி பேசினால்!

அப்பப்பா! ஒவ்வொரு நாளும் எத்தனை பேர் வருகிறார்கள் தெரியுமா? என் காது கூடச் செவிடாகிவிடும் போலிருக்கிறது. அப்படிப் போடுகிறார்கள் சத்தம். கோவிந்தா கோவிந்தா எனும் கூச்சல். நானிருக்கும் திருப்பதி மலையைக் கூடக் குடைந்துவிடும். தீராதவினையெல்லாம் தீர்த்துவைப்பான்—'துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம்' செய்வான்—ஏழுமலையானை நம்பினால் எல்லாம் இடைக்கும் எனும் நம்பிக்கையுடன் ஒவ்வொருநாளும் பல்லாயிரக் கணக்கில் வருகிறார்கள். தென்னாட்டிலிருந்து மட்டுமல்ல வடக்கே இருந்துகூட, திருப்பதி வெங்கடேசனைத் தரிசிக்க ஏராளமாக வருகிறார்கள்—வருபவர்களும் சும்மாவா வருகிறார்கள்? ஆயிரம் பத்தாயிரம் என்று ரூபாய்களை மூட்டைகட்டிக் கொண்டு வந்து உண்டியலில் போடுகிறார்கள்! அந்தப் பணத்தில் எவ்வளவு தொகை "இன்கம் டாக்ஸ்" கண்களில் தப்பியதோ யாருக்குத் தெரியும்! பாமரர்கள் மட்டுமல்ல, படித்தவர்கள்கூட, 'திருப்பதிக்குப் போனேன்' என்று சொல்லிக்கொள்வதென்பது, ஒரு 'பெரியமனுஷத்தனம்' என்கிற அளவுக்கு இப்போது நானிருக்கும் பதியின் கீர்த்தி பரவி இருக்கிறது. ஏனிவர்களெல்லாம் வருகிறார்கள், வருகிறவர் எங்காவது மரம் செடி கொடி பக்கம் உட்கார்ந்து ஆண்டவன் பெயரைச் சொல்லி 'தபசு' செய்கிறார்களா, என்றெல்லாம் பார்த்தால் இல்லை. என் கார் செவர்லே அவனது பிளிமித், அதோ இருப்பது பியட், இது இந்துஸ்தான், இப்படித்தான் பேசுகிறார்கள். பெண்களிடமோ கேட்கவேண்டியதில்லை—கோயில் பிராகாரத்துக்கு வந்தால்கூட, அவர்கள் கண்கள் ஆண்டவனிடமா இருக்கிறது? சரி, அது இடக்கட்டும்! நான் வந்த கதையை வாய்விட்டு உங்களிடம் சொல்ல வந்து, எதைதையோ சொல்லிக்கொண்டிருக்கிறேனே! திருப்பதிக்கு நான் வரவில்லை—கொண்டுவரப்பட்டேன். எல்லோரும் காணிக்கை செலுத்த இங்கு வருவார்கள். ஆனால் எனக்குக் காணிக்கை செலுத்திய பிறகுதான், என் முதலாளி இங்கே அனுப்ப ஒப்பினார். 'ஸ்பெஷலாக' என்னைத் தயாரித்தார், என் முதலாளி! என்னை உற்பத்தி பண்ண இரவு பகலாக எத்தனை தொழிலாளிகள் உழைத்தார்கள் தெரியுமா? ஆரம்பத்தில் நான் வெறும் இரும்பாய், மண்ணோடு மண்ணாகக் கிடந்த காலத்தில் என்னைத் தோண்டி எடுக்கப் பாடுபட்டவர்களை நினைத்தால் என் மனம் பதறுகிறது. இருநூறு அடி, முந்நூறு அடிக்குக் கீழே, பாறைகள் சரிந்து விழுமோ, எப்போது பூமிக்குள்ளேயே புதைந்துவிடுவோமா, சுரங்கத்துக்குள் நுழைந்த நாம் திரும்பிப்போய்ப் பெண்டு பிள்ளைகளைக் காண்போமா, என்கிற சந்தேகமும் சஞ்சலமும் தாக்க, சாண் வயிற்றுக்காகச் சாவுகூடச் சாதாரணம் எனும் எண்ணத்துடன், பாட்டாளிகள் என்னைத் தோண்டியெடுத்து, பிறகு சுத்தப்படுத்தி இரும்பாக்கினார்கள். மண்ணோடு கலந்துகிடந்த நான் இரும்பாக, எத்தனையெத்தனையோ இயந்திரங்களுக்குள்ளேல்லாம் புகுந்து வந்தேன்! அந்த இயந்திரங்களைச் செய்தவன் தேசத்தில், ஏழுமலையானே கிடையாதாம். விசித்திர விசித்திரமான இயந்திரங்கள்! அவைகளின் உதவியால் இரும்பானேன். என்னைக்கொண்டு "ஸ்பெஷலாக ஒரு பெட்டி" தயாரிக்குமாறு 'ஆர்டர்' கொடுத்தார்கள். யார் தெரியுமோ, 'ஆர்டர்' கொடுத்தது? அந்த இடம் தான் ஆச்சரியத்துக்குரியது! தீராத வினையெல்லாம் தீர்த்து வைப்பார்—ஏழுமலையான் சந்நிதியேசக்தி, உண்டியலில் வேண்டிக்கொண்டு காசைப் போட்டால் எக்குறையும் தீர்த்துவைப்பார்—என்று பிரசாரம் செய்கிறார்களே அவர்கள் தான், 'ஆர்டர்' கொடுத்தவர்கள். திருப்பதி ஏழுமலையானுக்கு இருபது லட்சம் ரூபாய் மதிப்புள்ள தங்க வைர நகைகள் உள்ளனவாம். இவற்றைப் பூட்டிவைக்கத்தான், எனக்கு "ஆர்டர்" கொடுத்தார்கள். இருபது லட்சம்! ஆண்டவன், சர்வவல்லமையுள்ளவன், தயாபரன், உலகநாதன், அவனுக்கு இருபது லட்சம் என்ன, எத்தனை லட்சம் சேர்ந்தாலும் அவை ஒருபொருட்டா? இதெல்லாம், பக்தர்கள் கூற்றுப்படி, அவன் தந்ததுதானே! அவனன்றி ஓரணுவும் அசையுமோ? இருந்தும், அவனுக்குரிய இந்த இருபது லட்சத்தையும் பாதுகாக்க, கோயிலை ஆளுவோருக்கு ஏன் இவ்வளவு சிரத்தை வர வேண்டும்! ஸ்பெஷலாக ஆர்டர் கொடுத்து என்னைத் தருவிக்க வேண்டும்? "சார்! கள்ளச்சாவி போட்டால்கூடத் திறக்கமுடியாதபடி இருக்கவேண்டும்," என்றார்கள் கோயிலார். எவன் வருவான் ஈசன் பொருளைக் களவாடக் கள்ளச்சாவி கொண்டு? எம்பெருமான், கொஞ்சம் கோபக்குறியைக் காட்டினால், அவனுக்குக் குலை நோயென்ன, தலைவைக்கடக்கக்கு நூறுக்க முடியுமே! அப்படிப்பட்ட சக்தியெல்லாம் ஐயனுக்கு இருப்பதாகத்தானே இந்தக் கோயிலார் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்—பக்தர்கள், பஜனை பண்ணிக்கொண்டுள்ளனர், நாள் தோறும். இருந்தும், இப்படி, அந்த ஐயனுடைய சொத்துக்களைப் பூட்டிப் பாதுகாக்க, என்னைக் கொண்டுபோகிறார்கள் என்றால் என்ன பொருள்? பெரிய பெரிய பணக்காரன் என்னைப் பொட்டிட்டுப் பூஜித்து எனக்குள் கத்தை கத்தையாகப் பணத்தையும் நகைகளையும் வைத்துத் திணிக்கிறான். அவன், மனிதன்.

ஆசைப் பேய்க்கு ஆளானவன். ஆதலால் அப்படிச் செய்கிறான். பிறர், எடுத்துக்கொண்டுபோய் விட்டால் திரும்ப வராதே என்ற அச்சத்தில் செய்கிறான் அவன். ஆண்டவனுக்கு அந்த அச்சம் வருமா? ஆண்டவன் திருநாம மகிமையைச் சொல்லி வரும் பக்த கோடிகளுக்கு வரலாமா இந்த அச்சம்? தொட்டுப் பார்க்கட்டும் யாராவது வெங்கடேசனுக்குப் போட்ட நகையை—அவர்கள் கண்ணவிந்துபோவார்கள்! என்றல்லவா, தைரியத்தோடு சொல்லவேண்டும். ஏன் அந்தத் தைரியம், திருப்பதியான் புகழ்பாடுவோருக்கு வரவில்லை? என்னைக்கொண்டுவந்து, எனக்குள் பூட்டி, பத்திரப்படுத்துகிறீர்கள்? திருப்பதியில் என்னை "ஸ்பெஷலா"க்கியிருக்கிறீர்கள்—இட்டத்தட்ட ஒவ்வொரு கோயிலிலும் என்னைப்போல உருவிலும் சைசிலும் சிறிதான பல இரும்புப் பெட்டிகள் ஆண்டவர்களின் சொத்துக்களைப் போட்டுவைக்க இருக்கின்றனவாம்—பெரிய இரும்புப் பூட்டுகளைப் போட்டே ஒவ்வொருவரும் பூட்டுகின்றனராம். ஏனிப்படிச் செய்கிறீர்கள், பக்த கோடிகள்? ஒருவேளை, ஆண்டவன் சக்திபற்றி, இந்த நாத்திகர்களைப்போல அவர்களுக்கே சந்தேகம் இருக்குமோ!! தெரியாமல் கேட்கிறேன்—தயவுசெய்து விசாரித்து, "இரும்புப் பெட்டி—திருப்பதி கோயில்" என்கிற முகவரிக்கு எழுதுகிறீர்களா!!

★

தேசத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கின்றவன், அதிகார போதையில் நாம் இந்த உலகத்தில் எங்கேஇருக்கின்றேமென்று தெரியாத ஒரு நிலையில்கிடந்தால் அதனை நல்லவர் அனுமதிக்கக்கூடாது.

*

நாட்டிற்குத் தீமையைத் தரக்கூடியது என்று தங்கட்குத் தோன்றினால் அப்படிப்பட்ட காரியத்தை எக் காரணத்தை முன்னிட்டும் யார் செய்யாமல் இருக்கின்றார்களோ அவர்களைத்தான் நாம் அரசோச்ச ஏற்படுத்தவேண்டும்.




தீபாவளி போன்ற பண்டிகைகளுக்கு குறைந்த செலவில் வாழ்த்துத்தந்திகள் அனுப்ப முடிகிறதல்லவா? அதுபோல, தமிழர் விழாவாகிய "பொங்கல் திருநாளுக்கும்" சலுகை தருமாறு, மதுரை, இராமநாதபுரம் வர்த்தகசங்கத்தினர், தபால் இலாகா அதிகாரியிடம் ஒரு விண்ணப்பம் தாக்கல் செய்திருந்தார்களாம். "பொங்கல் விழா, அகில இந்திய விழா! அல்ல! மாகாண விழா! ஆகவே, வாழ்த்து அனுப்ப சலுகைதர முடியாது", என்று அதிகாரி பதிலளித்திருக்கிறாராம்.

*

இந்திய உபகண்டத்தில் ஒவ்வொரு மணிக்கும் சுமார் பதினாயிரம் குழந்தைகள் பிறக்கின்றன என்று கல்கத்தாவில் கடந்த திங்கள் கூடிய உலகத் தோழமை நாடுகள் மாநாடொன்றில் டாக்டர் சுசிலாநய்யார் எம். பி. தலைமை வகித்துப் பேசுகையில் சொன்னார். நகரங்களில் ஏராளமாகவும் இதைவிட அதிகமாகக் கிராமங்களிலும் குழந்தைகள் உற்பத்தியாவதாகவும் அவர் தெரிவித்தார்.

*

"இந்தியா" முழுவதிலும் திரைப்படத் தொழிலில் மொத்தம் சுமார் 200 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டுள்ளதாம். ஸ்டுடியோ சாதனங்களுக்காகச் செலவிடப்பட்டுள்ள தொகை 12 கோடியாம். படவினியோகக் கம்பெனிகளில் 10 கோடிமுதலீடுள்ளதாம். ஓராண்டுக்குத் தயாராகும்படங்கள் 100. மொத்தம் இருக்கும் தியேட்டர்கள் 4000. தியேட்டர்களில் முடங்கியுள்ள தொகை 120 கோடி. கச்சாபிலிம் இறக்கு மதிக்குத் தேவையான அந்நியச் செலாவணி 1½ கோடி ரூபாய்! 1957-ல் தென்னாடுமட்டும் சம்பாதித்து தந்திருக்கிற அந்நியச் செலாவணி 90 இலட்ச ரூபாய்!!

*

உலகிலேயே அதிகமாகத் தேநீர் குடிப்பவர்கள் யார்? சீனர்கள்தான்! இரண்டாவதாகப் பிரிட்டிஷாரையும், மூன்றாவதாக இந்தியாவினரையும், நான்காவதாக அமெரிக்கரையும் சொல்லலாம். அமெரிக்கர்கள் ஒவ்வொரு ஆண்டிலும் 200 கோடி கோப்பைத் தேநீர் குடிப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. தேயிலையை ஒரு காலத்தில் ஆடம்பரப் பொருளாகக் கருதி அமெரிக்கர்கள் குடித்துவந்தனர். சாதாரணமாக இப்போது ஆண்டுதோறும் 10கோடி இராத்தல் தேயிலை அமெரிக்காவில் செலவாகிறதாம்.

*

இந்திய உபகண்டம் முழுமையும் 9619 இரயில்வே இஞ்சின்கள் உபயோகத்திலுள்ளன. இவற்றில் 6,117 பிராட்கேஜ் மார்க்கங்களிலும், 3,502 மீட்டர் கேஜ்மார்க்கங்களிலும் உள்ளன. பிராட்கேஜில் 3,302 பிரயாணி வண்டிகளும், மீட்டர்கேஜில் 2,260 பிரயாணி வண்டிகளும் 30 ஆண்டுகளுக்குமேல் வேலை செய்தவையாகும்.

★



# உபதேசம் ஓயவில்லை

—[ச. வெ. பாண்டியன்]—

"உணவு உற்பத்தி வேகம் இதே நிலையில் போய்க்கொண்டிருந்தால் வருடா வருடம் நாம் 30-லிருந்து 40 கோடிவரை இழந்துவிடவேண்டியதுதான்" எனக் கணக்குக் காட்டி கண்ணைக் கசக்குகிறார் திட்டக்குழு உதவித் தலைவர் வி. டி. கிருஷ்ணமாச்சாரியார்!

"நூற்றிற்கு எண்பதுபேர் விவசாயத்தில் ஈடுபட்டுக்கொண்டே உணவிற்காக வெளிநாட்டை எதிர்பார்த்திருப்பது வெட்கமாக இல்லையா?" பாபு இராஜேந்திர பிரசாத் நாட்டுத் தலைவர் — வினயமாக வினவுகிறார்!

அகிலம் புகழும் "நேருவோ" இப்படியே போய்க்கொண்டிருந்தால் அரிசிக் "கண்ட்ரோல்" கொண்டுவரவும் தயங்கமாட்டேன்" என அதட்டியே பேசுகிறார்!

திட்டக் குழுவிலிருந்துதேசியத் தலைவர்கள்வரை உணவு நிலை குறித்து இப்படியெல்லாம் அபாய அறிவிப்புச் செய்து வருகிறார்கள். காங்கிரஸ் ஆட்சியினர் தங்களது பதினொரு ஆண்டுகால ஆட்சியில் உணவுப் பிரச்சனையை ஒழிக்க வக்கில்லாமல் இப்படியாவது வாய்திறந்து பேச முற்பட்டிருப்பது கண்டு நாம் பாராட்டத்தான் வேண்டும். போகட்டும், வருந்தத்தக்க நிலை மாற என்னென்ன நடவடிக்கைகளைச் செய்யவேண்டும்?

இதற்கெல்லாம் பதில்சொல்வதைப் போல இம்மாதம் 9-ம்தேதிய "காமர்ஸ்" என்னும் பம்பாய் ஏடு கீழ்க்கண்டவாறு தனது தலையங்கத்தில் எழுதியுள்ளது. அது வருமாறு:- நமது நாட்டில் பயன்படுத்தப்படாத நீர்ப்பாசனத் திட்டங்கள் ஏராளம் இருக்கின்றன. இவைகளை உபயோகத்திற்குக் கொண்டுவராமல் இருப்பது தேசிய அழிவு மாத்திரமல்லாமல், பண நெருக்கடியையும் உண்டாக்க வல்லது. எனவே எல்லா மாகாணங்களும் தாமதிக்காமல் நீர்ப்பாசன வளங்களைப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்க முயலவேண்டும்" "காமர்ஸ்" இந்த முறையில் விளக்கம் தந்திருக்கிறது!

சமீபத்தில் 'ஐதராபாத்'தில் கூடிய தெற்கு வட்டார மாநாட்டில் கலந்து கொண்டு பேசிய டில்லி மந்திரி "ஜெயின்" அவர்கள் "சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு முதலிடம் தரவேண்டும்" எனப் பேசியுள்ளார்கள்!

"உணவு உற்பத்தி பின் தங்கியுள்ளது. இது போக்கப்பட வேண்டுமானால் எல்லா மாகாணங்களும் உடனே எல்லா நீர்ப்பானத் திட்டங்களையும் நிறைவேற்ற வேண்டும். மேலும் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு முதலிடம் கொடுக்கவேண்டும்" என்பவைகள் மேற்கண்ட அவர்களின் உபதேசங்களினின்றும் நாம் பெறுபவைகள்! ஆனால் நடைமுறையில் என்ன நடக்கிறது? இதற்கு நேர் எதிர்தான் நடந்துகொண்டிருக்கிறது.

நமது 'தமிழக மாகாணமே' இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். சமீபத்தில் நமது சென்னை சர்க்காரால் திட்டமிடப்பட்டு 'டெல்லி'யின் அங்கீகாரத்திற்கு அனுப்பப்பட்ட சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் 20! இதில் 'டெல்லி' தேவதைகள் பெரிய மனது பண்ணி ஒப்புக்கொண்டவைகள் 6!

## 20க்கு 6

சிபார்சு செய்யப்பட்ட திட்டங்கள் பெரிய திட்டங்கள் அல்ல — சிறிய திட்டங்கள்! ஒவ்வொரு திட்டங்களுக்கும் செலவழிக்கப்படவேண்டிய பணமோ கோடிக்கணக்கில் அல்ல, ஒருசில லட்சங்களே! எனினும் 'டில்லிக்கு' மனம் இல்லை!

"தவறான முறையில் திட்டம் தயாரித்திருப்பார்கள்" என்றும் கூறிவிடுவதற்கில்லை; ஏனெனில் சென்னாட்களுக்கு முன் மராமத்து இலாகா தலைமைச் செயலாளர் எஸ். கே. செட்டூர் என்பார் சென்னை பொறியியல் வல்லுநர்களைப்பற்றிப் பேசும் போது, "நமது பொறியியல் வல்லுநர்களின் திறம் நாடு அறிந்ததாகும். இதனால்தான் மத்திய சர்க்காரும், மற்ற மாநில சர்க்கார்களும் தங்களது திட்டங்களை நிறைவேற்ற நம்மவர்களை அழைக்கிறார்கள்" என்னும் கருத்துப்படப் பேசியிருந்தார்கள். இப்படி இந்தியாவெங்கும்புகழ்பெறும் அளவுபெருமையுள்ள தமிழகப்பொறியிலர்கள்தான் இந்த இருபது திட்டங்களையும் பரிசோதித்து, லாப நட்டங்களைக் கணக்கிட்டுப் பார்த்து, உபயோகம் உள்ளது எனக் கண்டபின்பு தான் சர்க்கார் சிபார்சு செய்துள்ளனர்!

என்றாலும் முயற்சி பலன்தரவில்லை! 20க்கு 6 தான் வழங்கப்பட்டுள்ளது! காமராசர் அரசும் "பெற்றதே பெரிது" என வாளா இருக்கிறது.

உணவுப் பற்றாக்குறை இருக்கத்தான் செய்கிறது! இதைப்போக்க நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு—சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு முதலிடம் அளிக்கவேண்டும் என மந்திரிகளும், ஏடுகளும் உபதேசம் புரியத்தான் செய்கின்றனர்!

நடைமுறையிலோ கொடுக்கும் திட்டங்களைத் தூக்கி எறிகிறது "டில்லி" 'சென்னை'க்கு என்றாலே 'டில்லி'யின் முகம் சுண்டிவிடுகிறது! வடக்கே 60 கோடி, 70 கோடி, 135 கோடி எனத் திட்டங்களுக்கு கொட்டியளக்கிறார்கள்! திட்டமிட்டபலன்கிடைக்காவிட்டாலும் மேலும் கொட்டிச் செலவழிக்கிறார்கள்! இதற்கெல்லாம் பணம் வருகிறது டில்லிக்கு! ஆனால் நமக்கு என்றதும் கை சுருங்கிவிடுகிறது! வடக்கின் 'வஞ்சனை' என்பதைத் தவிர வேறு என்ன?

தென்னாட்டில் வடநாட்டைப்போல செலவழிக்கத் திட்டம் எங்கே இருக்கிறது என்று பேசும் பெரிய மனது படைத்தவர்களே, சென்னையின் ஒவ்வொரு திட்டத்திற்கும் சில இலட்சங்களே செலவாகக் கூடியவைகளுக்கும் அனுமதியளிக்க 'டில்லிக்கு'மனசு வராதது ஏன்? ஏன்? ஏன்?








காஞ்சீபுரம், 95, திருக்கச்சிநம்பி தெரு "திராவிடநாடு" அச்சகத்தில் ஆசிரியர் சி. என். அண்ணாதுரையால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.

